குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 16] துன்முகிஆண்டு பங்குனித்திங்கள் 10—4—57 [இதழ் 5





ஆசிரியர் வித்துவான், சோமசுந்தரத் தம்பிரான்
தருமபுர ஆதீனம்
துணை ஆசிரியர் முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்

ௐ
குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

## உட்பொருள்





அட்டைப்பட விளக்கம் :

திருக்கடவூர் ஸ்ரீ அபிராமி அம்பாள் சமேத ஸ்ரீ அமிர்த கடேசுவரர் திருக்கோவில் கும்பாபிஷேகத்தை ஒட்டி, ஸ்ரீ காலசங்காரக் கடவுள் இவ்விதழின் அட்டைப் படத்தை அழகு செய்கின்றார்.




உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 16 } துன்முகி௵ பங்குனி௴ 10—4—57 { இதழ் 5

உ
திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிங் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் ! பிஞ்ஞகா ! பிறப்பிலீ !
கொன்றையம் முடியினாய் ! கூடலால வாயிலாய் !
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## இறவாத இன்ப வாழ்வு

உயிர்கள் இன்பத்தையே எண்ணுகின்றன. விரும்புகின்றன. ஆராய்ந்து அவ்வின்பம் அடையும் வழியைத் தேர்ந்து, அவ்வழியில் விரைந்து செல்லுகின்றன. சென்று அடையும் இன்பம் எது ? எவ்வளவு ? எத்துணைக்காலம் ? எவ்வாறு ? இவ்வாறு அவ்வின்பத்தையும், அதன் அளவையும், அதனை நுகர் பொழுதின் சிறுமையையும் எண்ணி, இச் சிற்றின்பம் வேண்டா ; மாணிக்கவாசகர் திளைத்த,

‘ பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவில்லா
மாளா இன்ப மாகடலே ’

வேண்டும் ; அப்பரமானந்தப் பழங்கடல் சேர்ந்து ஆவியை யான் என்றும், யாக்கையை - உலகை எனது என்றும் பற்றும் இருவகையும் அற்று, என்றும் இறவாத இன்ப வாழ்வே

எய்துதல் வேண்டும் என்று எண்ணி அதைப்பெற முயலும் உயிரே நல்லுயிர்.

அத்தகைய நல்லுயிர் பற்பல ஆகா. சிற்சிலவே, பற்பல உயிர்கள் சிற்றின்பத்தையே விரும்பும். அந் நல்லுயிர் சிற்சிலவற்றுள் அடங்கி விளங்கிய மார்க்கண்டேய முனிவர் இறவாத இன்ப வாழ்வு எய்திக்கொண்டு இன்றும் இலங்குகின்றார். அவரைக் காணும் கண் பெற்றால், அவரைக் காண்பது எளிது.

> ' என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
> நின்னிலை யனைத்தையும் கண்டேன் என்னே
> நின்னைக் காணா மாந்தர்
> தன்னையும் காணாத் தன்மை யோரே '
>
> (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. 13)

என்றருளினார் பட்டினத்தார். ' ஆன்மாக்கள் பிற ஆன்மாக்களை அறியுமாறு இல்லைபோலும் எனின், அறியாது கூறினாய். கண் விளக்கொளியைக் காணுங்கால் அதுவே தானாக நின்று தன்னையும் அவ்விளக்கொளி வண்ணமாய்க் காண்டல் உண்டு. ஏனைக் கண்களையும் அவ்வாறு காண்டல் அமையும். அதுபோல, ஆன்மாவும் பிறவுயிர்களைத் தனித்த முதலாய்ப் பிரித்து அறியுமாறு இல்லை. சிவத்தை உணரும் வழித் தான் அதுவாய் நின்று தன்னை அறியும் ஆறுபோலப் பிறவுயிர்களையும் அச்சிவத்தின்வண்ணமாய்க் கண்டறிதல் அமைவுடையது. ' (சிவஞானபாடியம். சூ. 10. அதி. 1 முடிவு) இவ்வமைதியால், மார்க்கண்டேயரைக் காண்டல் இயலும் அம் மாண்புடையோர்க்கு.

மார்க்கண்டேயர் பிறந்தார். இறந்தாரல்லர். பிறப்பு என்பது யாது ? பரியது, நுண்ணிது, மிகு நுண்ணிது என்று மூன்று உடல் உண்டு. பரியவுடல் (ஸ்தூலதேஹம்) நுண்ணுடல் (சூக்ஷ்மதேஹம்) மிகு நுண்ணுடல் (அதிசூக்ஷ்மதேஹம்) என்ற மூன்றுடலுள், பாருடலை (ஸ்தூலதேஹத்தை) அடைவது உயிர்க்குப் பிறப்பாகும். அதனை விடுவது இறப்பாகும். இம் மூவேறுடலும் அடையாதநிலை வீடு (முக்தி) ஆகும். உடல் உள்ளபோதே உடலைப் பொருட்படுத்தாத நிலைமையில் வீடு எய்தியதற்கு ' ஜீவன்முக்தி ' என்றுபெயர். மார்க்கண்டேயர் ஜீவன்முக்தர்.



குறித்தகாலத்தில் உயிரையும் உடலையும் கூறுபடுத்தும் ஆற்றல் ஒன்று நிலையாக உண்டு. இதனை நாத்திகரும் உடன்படுவர். உடன்படினும், அதனை ' இயற்கை ' என்பர் நவீன நாத்திகர். அக்கூறுபடுத்தும் ஆற்றலாகிய தருமத்தை ' இயமன் ' என்பர் சமய ஞானியர். காலன், கூற்றன் முதலிய பல பெயர்கள் அவ்வாற்றலைக் குறிக்க ஆளப்படுகின்றன. இங்கு எல்லோரும் எண்ணத்தக்கது ஒன்று உண்டு. அது இது :- உடலும் உயிரும் கூடுவது பிறப்பு ; அவை பிரிவது இறப்பு என்பது. உயிரை உடல் கூடாது. உடலை உயிர் கூடும். கூடும் உயிர்க்கும் உடலைக் கூட்ட, வேறு ஓர் ஆற்றல் வேண்டும். உயிரே உடலைக் கூடுவதாயின் தனக்கு வேண்டியதைக் கொண்டு வேண்டாததைத் தள்ளிவிடும் அன்றோ ? அழகில்லாத உடலைக் கூடுமோ ? நோய்க்களமான உடலில் நுழையுமோ ? வருத்தும் உடலில் இருந்துகொண்டு வருந்துமோ ? உடலல் - வருத்தல். உயிர் செய்த வினைக்குத் தக்கவாறு உடலைக் கூட்டும் ஆற்றல் உலகுயிர்களைக் கடந்த ஒன்றனுடையதே. அதுவே எல்லாவற்றையும் கடந்தது. அக் கடவுளின் ஆற்றலே பிறப்பையும் இறப்பையும் ஒழித்துப் பேரின்ப வாழ்வு தரவல்லது. அதனைக் குலம், கல்வி, தவம் முதலிய பல ஏதுக்களால் அறிந்து அடைந்த மார்க்கண்டேயர் தம்பால் உள்ள அக் கடவுளது ஆற்றலை வளர்த்துக் கொண்டே வந்தார். அவ்வாற்றல் எல்லா விதியையும் கடக்கும் வலிமை உடையது ; தலைவிதிக்கெல்லாம் தலைவிதியாகிய பிறப்பு இறப்பு முதலிய எல்லாத் துன்பங்களையும் அகற்றிக் காக்கவல்லது; அதுவே, தம் வரையறைக்குட்பட்ட ஆயுளின் முடிவில் வந்து, தம்மையும் தமது உடலையும் கூறுபடுத்தும் ஓர் ஆற்றலைத் தோற்றோழியச் செய்யத் தக்கது என்று உணர்ந்து உறுதியாகப் பற்றினார். அவ்வுறுதி வேறன்று ; தாம் வழிபட்ட மூர்த்தியான சிவலிங்கத்

தினைச்சார்ந்து பற்றிய உறுதி வேறன்று. அச் சிவ வழி பாட்டால், இறத்தலாகிய துன்பம் மார்க்கண்டேயருக்கு இயல்பாக நீங்கிற்று. வழிபடும் எவ்வுயிர்க்கும் இது பொதுவே ஆயினும், சிறப்பாகிய மார்க்கண்டேயர் வரலாற்றால் அப் பொதுநலத்தைப் புராணம் சித்தாந்தம் செய்து கல்லார்க்கும் எல்லார்க்கும் உணர்த்துகின்றது. பிறப்பிற்கும் இறப்பிற்கும் தனித்தனி காரணம் உண்டு. அக்காரணத்தின் விளையுங் காரியம் பொய்யாகுமோ ? காரியம் மெய்யாக நிகழ்தலை அறிந்தால், காரணத்தையும் காரியகர்த்தாவையும் இல்லை எனல் இயலுமோ ? இறத்தல் காரியம். அதன் காரணம்ஆன வினைக்குத் தக அக்காரியத்தைச் செய்யும் ஆற்றல் 'காலன்' என்ற பெயரால் குறிக்கப்படுகின்றது. இறப்பினை அஞ்சாதார் சிலரே. எல்லோரும் அஞ்சுவர். கடையூர்க்குச் செல்ல அஞ்சிய அச்சமே திருக்கடையூர்க்குச் செலுத்துகின்றது. உடலாகிய கடம் வேற்றூரிலிருந்து அதை நோக்கி ஊர்கின்றது. கடம் ஊர்தலால் *கடவூர் என்று ஆனது என்னும் அறிஞரும் உளர்.

இறவாமலும், இறந்து மீண்டும் பிறவாமலும் அழியாத மெய்யின்பத்தைச் சிவபூஜை செய்து அடைதலே ஒவ்வோர் உயிர்க்கும் உற்ற கடனாகும். ஆதலின், அக்கடன்மையை உணர்ந்து சிவ வழிபாடு ஆற்றிப், பிறப்பும் இறப்பும் இனி இல்லாதவாறு செய்து கொள்ளும் பெரும் பயனை உட்கொண்டே திருக்கடையூரை அடைந்து, திருக்குளத்தில் முழுகித், திருக்கோயிலை வழிபட்டு உய்தல் வேண்டும்.

---

*குறிப்பு:- சொற்களில் கடம் என்பதும் ஊர் என்பதும் சேர்ந்தால் 'கடவூர்' என்று ஆகுமோ? மடம் + ஊர் = மடவூர்என்று ஆகுமோ? மணம் + ஊர் = மணவூர் என்று ஆனாலும் மணவூர் மணத்தூர் என்றாகாது. குளத்தூர் குளவூர் என்று ஆகாது. கடம் (வடசொல்) ஊர் (தமிழ்ச்சொல்) இரண்டும் கூடிக் கடவூர் என்றாகா. கடையூர் என்பதில் ஐகாரம் அகரம் ஆயிற்று. அகரமானபின், அகர வீற்றுக்குத்தக்க வகரவுடம்படுமெய் தோன்றி 'வூர்' என்று ஆகிக் கடவூர் என்று முடிகின்றது. கடையூர் என்றதில் உள்ள யகர வுடம்படுமெய், தான் நிற்றற்கு ஏதுவான ஐகாரம் அகரமாகத்திரிந்த பின், தான் தவிர்ந்தது.



இதுதான் மக்கட்குத் தக்க செயல். பேரின்ப நாட்டம் இல்லாதவராய், பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையில், உடலில் இருந்து அடையும் துன்பங்களைப் போக்கிக் கொள்ளல், இன்பங்களை எய்த வேண்டுதல் முதலிய சிறு நலங்களை நாடுவோரும் வந்து வழிபட்டுப் பெறலாம். பெரும் பயனை நாடுவோர் அரியர். அவரவருக்குள்ள பக்குவ பேதமே அதற்கு ஏது. 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான்' என்பது கொடுப்போனது ஆற்றல் முதலியவற்றைக் குறித்தது மட்டும் அன்று. வாங்கும் உயிர்களது அறிவின் அளவையும் அவாவும் நிலையையும் குறித்ததும் ஆகும். ஆகவே வழிபாட்டிலும் வேறுபாடு உண்டாகின்றது.

21—4—'57 ஒரு நல்ல நாள். அதுவே அத் திருக் கடையூரில் மிக்க பெரும் பொருட் செலவில் உயரிய குடமுழுக்குத் திருநாள். மகா கும்பாபிஷேக தினம். அந் நாளின் முன்னாட்கள் மூன்றும் பொன்னாட்கள். நான்காவது நாளோ அப் பொன்படைத்த பயன் எய்தும் (ஒளிமிக்க) நாள். நான்கு நாளும் நான்கு யுகத்திலும் இருந்து ஒருவன் இன்பமே அடைவதாயின் எவ்வாறோ ? அவ்வாறே அத்திரு நாட்களில் தொண்டர்கள் பேரின்பம் அடைவார்கள். அதுவும் தத்தம் பக்குவ ஞானத்துக்குத் தக்கபடியேதான் விளங்கும். சிறு நலங்களை வேண்டுகின்றவர்களும் ஒருகாலத்தில், மார்க் கண்டேயரைப்போல, இறவாத இன்பவாழ்வு எய்தும் உயரிய நாட்டங்கொள்வர். அவர்போல் சிவபூஜை புரிவர். இறப்பைக் கடப்பர். இறவாத-பிறவாத உயர்நிலையை உறுவர். இறவாத இன்பம் எய்துவர். அவ் வின்பத்தின் உருவாகித் திகழ்வர்.

> " இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டு கின்றார்
> பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புஉண்டேல் உன்னை என்றும்
> மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
> அறவாநீ ஆடும் போதுஉன் அடியின்கீழ் இருக்க என்றார், "

இவ்வொருபாட்டில் வேண்டும் என்று எத்தனை இருக்கின்றன? இருந்தும் வேண்டியது திருவடி நீழலே. வாழ்க காலசங்காரக் கடவுள் வழிபாடு. வாழ்க மார்க்கண்டேயமுனிவர் முதலியோர். வாழ்க உலகெலாம். வளர்க கடவுட்பற்று.

திருப்பனந்தாள்

# ஸ்ரீ காசி மடாலயத்துப் பரிசுகள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடாலயத்து அறக்கட்டளை நிதியின் சார்பில், 1956—57 இல் நிகழ்த்திய தேர்வுகளின் பரிசு விவரம் :-

1. தருமையாதீனப்புலவர், சித்தாந்த ரத்நாகரம் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களுக்கு, ஆதி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு சைவ சித்தாந்த சாஸ்திரப் பரிசு ரூபாய் ஆயிரம். (1000—0—0).

2. திரு. எம். வேங்கடேசனுக்கு, கம்பர் நினைவு பரிசு ரூபாய் நூறு. (100—0—0).

3. திரு. எஸ். துரைபாண்டியனுக்கு, சேக்கிழார் நாயனுர் நினைவு பரிசு ரூபாய் நூறு. (100—0—0).

4. திரு. ஏ. துரைராஜுக்குத் திருவள்ளுவர் நீதிநூற் பரிசு ரூபாய் நூறு. (100—0—0).

5. திரு. ஜி. அழகர்கிரிசாமிக்கு ஆதி ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு யாப்பியற் பரிசு ரூபாய் நூறு. (100—0—0).

6. வித்துவான், திரு. ச. சம்பூரணம்மாளுக்கு கோட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் நினைவு திருவாசகப் பரிசு ரூபாய் நூறு. (100—0—0).

7. திரு. ஆர். மீனுட்சிக்கு நம்பியாண்டார்நம்பிகள் நினைவு பன்னிருதிருமுறைப் பரிசு ரூபாய் நூறு. (100-0-0).

31—3—'57 முற்பகல் 1½ மணிக்கு, அண்ணமலை நகரில், செனேட் மீட்டிங்கில் தலைவர், உயர்திருவாளர். T. M. நாராயணசாமி பிள்ளை B. A., B. L., அவர்கள் பரிசு வழங்கினார்கள். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி பிரின்ஸிபால் ஆயிரம் ரூபாய் பரிசு பெற்றார்கள்.



குருபாதம்

# சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்.

சந்தாதார்களுக்கு அனுப்பும் பத்திரிகைகளின் (விலாசமிடப்பட்டிருக்கும்) மேலுறையில் சந்தாதார்களின் சந்தா எண்ணும் குறிக்கப்பெற்றுள்ளது.

சந்தா பாக்கியுள்ள அன்பர்கள் தங்கள் பாக்கியை அனுப்பித் தருவதுட ன்1957-ம் ஆண்டிற்கான சந்தாத் தொகையையும் அனுப்பும் வண்ணம் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

சந்தா பாக்கிக்காக, பத்திரிகையை வி. பி. பி. மூலம் அனுப்புவது தபால் கட்டணத்துடன் சேர்த்து தொகை அதிகமாகிறதென்ற விவரம் பன்முறையும் சந்தா நேயர்களுக்குத் தெரிவித்திருக்கிறோம். நம் பத்திரிகை குறைந்த சந்தாவில் நேயர்களுக்குக் கிடைக்க வேண்டும் என்பதே ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் குறிக்கோள். சந்தா நேயர்கள் சந்தாத் தொகை அனுப்பும்போது பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாவா என்ற விவரமும் தெரிவித்தல் நலம்.

சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிட்டு எழுத வேண்டும். சந்தாநேயர்கள் தங்கள் விலாச மாறுதலை உடன் தெரியப்படுத்தினுல் உரிய காலத்தில் அவர்களுக்குப் பத்திரிகை கிடைக்க அனுகூலமாக இருக்கும்.

சைவமும் தமிழும் பேணும் ஞானசம்பந்தத்திற்குத் தமிழ்ப் பெருமக்களின் பேராதரவு என்றென்றும் வளர்ந்தோங்க விரும்புகின்றோம்.

துணையாசிரியர்

The following particulars regarding the ownership of the 'GNANASAMBANDAM' the Monthly newspaper, are published as called for by Rule 8 of the Registration of News papers (Central) Rules, 1956.

FORM IV

1. Place of publication ... Dharmapuram.

2. Periodicity of publication ... Monthly.

3. Editor's Name ... Sri-la-Sri Somasundara Thambiran Swamigal.

Nationality ... Indian.

Address ... 41, Usman Road, T. Nagar, Madras 17.

4. Printer's and Publisher's name ... Sri K. Sundaresa Iyer,

Nationality ... Indian,

Address ... Agent, Dharmapuram Adhinam, Dharmapuram, Mayuram.

5. Name of the owner ... His Holiness Sri-la-Sri Subramanya Desika Gnanasambanda Paramacharya Swamigal Avl. Dharmapuram Adhinam, Dharmapuram, Mayuram P. O. Tanjore Dt.

**மதிப்புரை**

**மருத்துவக்குடி வாக்கிய பஞ்சாங்கம்**

ஹேவிளம்பி வருஷம்:- விலை $6\frac{1}{2}$ அணு. பஞ்சாங்கம் விற்கும் எல்லாக் கடைகளிலும் கிடைக்கும். கஞ்சனூர் அண்ணவையங்கார் சிஷ்ய பரம்பரை மருத்துவக்குடி சுவாமிநாத ஜோதிஷர் குமாரர் ஸ்ரீ G. S. வேங்கடராமையர் அவர்கள் கணித்தது. நூறு ஆண்டாக இப்பஞ்சாங்கம் ப்ரசித்திபெற்று விளங்குகின்றது. 59 ஆண்டாக அச்சிடப்பெற்று வருகின்றது. பெரிய விற்பன்னர்களாலும் ஆதீனங்களாலும் ஆதரித்து வரும் புகழுடையது. வாழ்க்கைக்கு வேண்டிய அரும்பெரும் பொருள் களைப் பிற்சேர்க்கையாக 15 பக்கம் கொண்டிருக்கிறது.

துணையாசிரியர்.

# பீடாரோஹணப் பொன் விழா

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கவும், சைவமும் வைணவமும் இணைந்து வளரவும் ஏற்றபணிகளைக் கண்டு வரும் ஞான ஒளியாக ஸ்ரீமத். சங்கராச்சாரிய சுவாமிகள் விளங்கிவருகின்றார்கள். அவர்கள் பட்டமேற்ற 50 ஆவது ஆண்டு நிறைவு பொன்விழாவாக நாடெங்கணும் பொலிகின்றது. எங்கணும் உள்ள மெய்யன்பர்கள் குருபக்தியை முன்னிட்டு நிகழ்த்திவரும் சொற்பொழிவுகளும் அவ் விழாவுக்குச் சிறப்பளிக்கின்றன. வேத தரும நெறியும் தேவாரச் சிவநெறியும் ஓங்க ஸ்ரீமத். ஆசாரிய சுவாமிகள், செய்துவரும் பணிகள் அளவிடலரியன. அப்பணிகள் வளர்பிறைபோல் மேலும் வளர வேண்டுமென்று வாழ்த்துகின்றோம். ஸ்ரீமத். ஆசாரிய சுவாமிகளது வாழ்நாளும் சமரச மன நிலையும் பெருகி வளர வேண்டுமென்று எல்லாம் வல்ல சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.



## புத்தாண்டு வாழ்த்து

பூவுல கெங்கணும் யாவரும் போற்றும்
சைவ சித்தாந்தத் தெய்வநன் னெறிபோல்
வருகபுத் தாண்டே! வருகபுத் தாண்டே!
சிந்தனைத் தூய்மையும் வந்தனைத் தூய்மையும்
நல்லறம் மேவிய இல்லறம் துறவறம்
இன்னவை பிறவும் பொன்னவிர் செஞ்சடை
மிக்கநற் பேரொளிச் சொக்க நாயகன்
அருளால் ஓங்கிட வருகுவை நீயே.
ஏவிளம்பியாய்ப் பார்விளம்பிட
வருக பாரினில் தருக நன்னெறி
வாழி வாழியென வாழ்த்துதும் யாமே.

## சைவ சித்தாந்த சாத்திரப் பரிசு 1000 ரூ. பெற்ற

### திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவாக வைத்திருக்கும் சைவ சித்தாந்த சாத்திரப் பரிசு ரூ. 1000-ஐ இவ்வாண்டு, ஆதீனப் பல்கலைக் கல்லூரி பிரின்ஸிபாலும், தருமையாதீனப் புலவரும் ஆகிய முதுபெரும் புலவர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் (இவ்விதழ்த் துணையாசிரியர்) பெற்றுள்ளார்கள். அது குறித்துக் கல்லூரி, உயர்பள்ளி ஆசிரியர்களும் மாணவர்களும் கூடிக் கல்லூரி மன்றத்தில் தருமையாதீன சென்னைச் சமயப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் (3—4—'57) புதன்கிழமை மாலை ஒரு பாராட்டு விழா நிகழ்த்தினர். பேராசிரியர்களும் மாணவர்களும் பாராட்டினர். திரு. முதலியார் அவர்கள் தமக்கு அளிக்கப்பட்ட பாராட்டுக்குத் தக்க மறுமொழி தந்தார்கள். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது. புகைப் படங்கள் எடுக்கப்பெற்றன.

சொல்லின் செல்வர் :

## டாக்டர். திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை அவர்கள்

தமிழ் இன்பத்தை இனிய சொல்லின்பமும் பொருளின்பமும் சேர்த்து விரிவுரையின்பமாகத் தருகின்ற விச்சையில் சிறந்தவர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்., அவர்கள். வேலின் வெற்றியாகக் கந்தபுராணத்தைத் தந்த விழுமிய தமிழ்த் தொண்டர். ஊரும் பேரும் தந்து சீரும் சிறப்புமுற்றவர். ஆராய்ச்சிக் கட்டுரைகளால் பாரோரேத்த வாழ்பவர். தேய்வந் தெளிந்து தெளிந்தோர்ப் பேணும் திறன்மிகு புலவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர். நாடும் வீடும் ஏடும் அறிந்த ஈடும் எடுப்பும் அற்ற இனிய சொற்செல்வர். திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை அவர்களைச் சொல்லின் செல்வராகவும், திரு. ஈ. த. இராசேசுவரி அம்மையாரை விஞ்ஞானச் செல்வியாகவும், திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் அவர்களைப்



பல்கலைச் செல்வராகவும், திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்களைச் செந்தமிழ்ச் செல்வராகவும், திரு. ஏ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்களைச் செந்தமிழ்க் காவலராகவும், திரு. சிவராமன் அவர்களைச் சித்தாந்தச் செல்வராகவும் ஆக்கியுள்ளது தருமை ஆதீனத்தின் ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கத்தின் திருவருள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பெருங் கருணை சேது (திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை) முதலாக, காசி (திரு. சிவராமன்) ஈறுக இந்நாள்வரை பட்டம் வழங்கியுள்ளமை திருவருள்வாய்ப்பல்லவா?

இத்தகைய தமிழ்ப் பெரியாராகிய திரு. ஆர். பி. சேதுப் பிள்ளை அவர்களுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியிருப்பது குறித்து இதயங்கனிந்த பாராட்டுகளை அன்னுர்க்குத் தெரிவித்துக்கொள்கின்ருேம்.

### ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின்

## ஜன்மநக்ஷத்திர அபிஷேக ஆராதனை

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் மாத ஜன்மநக்ஷத்திர நாட்களில் திருப்பதிகம் பெற்ற சிவதலங் களில் ஆதீனச் சார்பில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்துத் தலப் பதிகங்களையும் அச்சிட்டு வழங்கிவருதல்போல இம்மாதத் திலும் 17—3—'57 ஞாயிற்றுக்கிழமை அன்று திருக்காருயில் ஸ்ரீ கண்ணுயிரநாதசுவாமி ஆலயத்தில் அபிஷேக ஆராதனைகள் ஆதீனச் சார்பில் செய்விக்கப்பெற்றன. ஆதீன வெளியீடாக அச்சிட்ட திருக்காருயில் திருப்பதிக உரையை வழங்கி, தருமை ஆதீனத் தேவாரபாடசாலை ஆசிரியர், திரு. ஆர். வேலாயுதஓதுவா மூர்த்திகளால் பண் முறைப்படி பதிகம் முழுவதும் பாராயணமாக ஓதப்பெற்றது.



# திருநெறி வளர்க்கும் திருக்கடவூர்

வித்துவான். திரு. சொ. சிங்காரவேலனுர் அவர்கள்
தமிழ்ப்பேராசிரியர், பல்கலேக் கல்லூரி, தருமபுரம்.

**இன்பம் துன்பம் :**

இன்பம் துன்பம் இரண்டுமே உலகம். ஒளி இருள் இரண்டாலுமே உலகம் இயன்றிருக்கிறது. மேடு பள்ளம் இரண்டுந்தாம் மேதினியில் இடம் பெற்றிருக்கின்றன. எங்கு நோக்கிணுலும் இவ்விரண்டின் ஆட்சிதான். மனிதனுக்கு வாழ்வளித்த பேரா இயற்கைப் பெருங்கூத்து இவ்விரண்டினேயுமே மனிதனின் அடிப்படையாக அமைத்திருக்கின்றது. இன்பத்தால் எக்களித்து முனேப்பு மேலிட்டு, தற்போதம் மிகுத்துக் கெட்டுவிடாமல், துன்பத்தால் துயருழந்து மனத் தளர்ச்சி மிகுந்து சோர்வு மேலிட்டு வாடிவிடாமல் குறிக்கோள் தவருமல் வாழ்வுப் பாதையில் மனிதன் செல்ல வேண்டியிருக்கிருன். இதை உணர்ந்துவிட்டால் மனிதமனம் திருந்தும்; நிலேக்கும்; இயங்கும். இதை உணராதபோது மனிதமனம் கனேக்கும்; சனேக்கும். இனிதாக இயங்காது. இது நமது முன்னேர்கள் சொல்லாமற் சோல்லி வைத்த இரகசியம்.

**இனிய காணுக :**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒருநாள். தமிழகத்து வீதியிலே தளர்ந்த நடையோடு வருகிருர் ஒரு புலவர். அவரது நரைமுதிர் யாக்கை அவரை ஒரு முதுபெரும் புலவரேன்று நவில்கிறது. நெற்றியில் சுருக்கங்கள்; சிந்தனே தேங்கிய திருமுகம். கையில் ஏடும், எழுத்தாணியும். ஆம்; இப்படி வருகிறது அப்புலமை விளக்கு. வீதியில் வருவோர் போவோர்களே யெல்லாம் கூர்ந்து நோக்குகின்றன அவரது கூர்விழிகள். சுற்றுப்புறங்களேச் சுழன்று சுழன்று பார்க்கின்றது அவரது இனிய திருமுகம். உண்மை நாடும் ஆள்வினே தலேப்பட்டவர் அவர் என்பதனே அவருடைய ஒவ்வொரு உறுப்பும் காட்டுகிறது. அப்போது அவ்வீதியிலே இரண்டு இல்லங்கள் அவரைப்பெரிதும் கவர்கின்றன. நிற்கிருர். நெடிது நோக்கி நெடுமூச்செறிகிருர். ஓர் இல்லத்தில் பிணப்பறை எழுந்தொலிக்கிறது; இன்னேரு



இல்லத்தில் இனிய இசைக்கேற்ற தண்ணிய ஓசை மிக்க தண்ணுமை முழங்குகிறது. என்னே மாறுபட்ட உலகம்! ஒருபால் இன்பமும் ஒருபால் துன்பமுமாக அல்லவா உலகம் இயங்குகிறது! ஆம்; இப்படி எண்ணமிட்டிருக்க வேண்டும் அவர்; மேலும் நடக்கிருர். இனிய மாலேக்காலம் அது. காதலனேப் புணர்ந்த களிப்போடு காதலியர் பூக்களால் தம்மை அழகு செய்து கொள்ளும் காட்சி ஒருபக்கம்; 'ஆகா! எவ்வளவு இனிய காட்சி!' சற்று தூரத்தில் அவர்க்கு இன்னேரு அதிர்ச்சி காத்திருக்கிறது. அங்கே காதலனேப் பிரிந்த காதலியர், பூவணியிழந்து, புலம்பிய கண்ணேடு, வாடிய மலராய், ஓய்ந்துகிடக்கும் யாழாய்த் தனிமைத் துயரால் தவிக்கும் மங்கையரைக் காண்கிற அவர் வேதும்புகிருர். 'ஆம்; என்ன உலகம் இது,' இன்பமும் துன்பமுமாக அன்ருே இதனேப் படைத்திருக்கின்ருன், படைத்தவன்! அவன் பண்பில்லாதவன்; ஏன்? துன்பமயமானது இவ் உலகம்' என்று சிந்திக்கின்றது அப்பாவலர் சிந்தனே. அப்படியாஞல் கொடிய இவ்வுலகில் வாழ்வோர்க்கு வகையே இல்லேயா? உய்வே கிடையாதா? உண்டு; இன்னுத இவ்வுலகிடையே வாழ்வோர் இனிய வீட்டின்பத்தைக் காணமுயறல் வேண்டும். அதுவே இதனினின்று தப்புதற்குற்ற பேருவழியாகும்' என்று முடிவு கட்டுகிறது அவர் இதயம். பக்குடுக்கை நன்கணியார் என்ற அப்பைந்தமிழ்ப் புலவரது கருத்தோவியம் புறநானூற்றிலே தீட்டப்பெற்றிருக்கிறது.

" ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணியணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்புறைப்பப்
படைத்தோன் மன்ற அப் பண்பிலாளன்
இன்னுதம்ம இவ்வுலகம்
இனிய காண்கஇதன் இயல்புணர்ந்தோரே " (194)

உலக இயற்கையின் கொடுமையை நம் சங்ககால முன்னேர் எத்துணே நுண்ணிதாக உணர்ந்திருந்தனர் என்பதற்கு இதுவோர் எடுத்துக்காட்டு.

**அவிநாசிக் காட்சி :**

இவ் வண்ணமே சுந்தரமூர்த்தி அடிகள் அவிநாசியிலே முதலே உண்டபுதல்வனே அழைத்தபோது சேக்கிழார் பாடுகிருர்.

இரண்டு இல்லங்களில் மாறுபட்ட ஓசையைக்கண்டு சிந்தனை புரிகின்றார் அடிகள்.

" நிறையும் செல்வத் தெதிர்மனைகள்
இரண்டில் நிகழ்மங்கல வியங்கள்
அறையும் ஒலியோன் றினில்; ஒன்றில்
அழுகை ஒலிவந் தெழுதலும் "

(பெரிய - வெள்ளானை-5)

என்ற பகுதியையும் முற்கூறிய சங்கப் பாடற் கருத்திஞேடு ஒப்பிட்டு உணரலாம்.

**மணப்பறையே....**

நாலடியார் இதனைவிட இன்னும் சீரிதாய் இன்ப துன்பங்களை இயம்பியுள்ளமை எல்லோரும் அறிந்தவொன்றும். மணப்பறையே பிணப்பறையாய் மாறி ஒலிக்கும் அமங்கல நிகழ்ச்சியும் இவ்வக லுலகில் நிகழாமல் இல்லை யென்பது இங்கே காண்கின்ற செய்தி.

" மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலும் உண்டா மென்றுய்ந்து போமாறே
வலிக்குமா மாண்டார் மனம் " (23)

இவற்ருல் இவ்வுலகின் இயல்பை நாம் உள்ளபடி உணரமுடியும். இவ்வியல்பை உணர்ந்தவர்கள் இதனினும் இனிய வீட்டுலக இன்பத்தை நாடுதல் தலையான கடனுகும். இல்லையேல் இத னுள்ளேயே உழன்று துன்பவலையிற் சிக்கிக் கெட்டொழிதல் ஒருதலை.

**திருவடிப்பேறு :**

வீட்டின்பத்தை நாடுதலைச் சைவ சித்தாந்தம் ' திருவடிப் பேறு ' என்கின்றது. திருவடிப்பேறே வீட்டுநெறி. வீட்டுநெறி தலைப்பட்ட நம் சமயகுரவர்கள் அனைவரும் திருவடிப்பேற்றையே வேண்டி உருகுதல் இதனை வெளிப்படுத்தும். இன்பம் வேண்டி அலையும் உயிரினத்துக்கு இதுவொரு விழுமிய மருந்தல்லவா? இன்ப வேட்கையின் காரணமாக எங்கெங்கோ திரிந்து, கெட்டுச்



சிதையும் உயிரினத்தின் மேல் வைத்த ஒரு பெருங் கருணையால் நமது அருளாளர்கள் இத்திருவடி யின்பத்தையே பேரிதும் புகழ்ந்துள்ளதனை நாம் நன்கு கூர்ந்து சிந்தித்தல் வேண்டும்.

அந்த இடையருத சிந்தனையே நம் பந்த பாசங்களைத் துடைத்து அந்தமில் இன்பம் அருளவல்லது; இருவினை துடைத்துத் திருவினையருளும் திறமிக்கது. ஆயின் அச் சிந்தனைக்கு உறுதுணை புரிவனவே ' மாலற நேயமும், மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் '. ஆலயங்களில் உயிரினங்கள் காணத் திருமேனிகோண்டு பெருமான் வீற்றிருக்கின்ருன்; வேண்டிய வேண்டியாங்கு அருள் புரிகின்ருன்.

**விருப்பும் வெறுப்பும் :**

உயிர்களது விருப்பத்தில் முதற்படியில் நிற்பது வாழ்வுதான். எனக்கு நல்லவாழ்வு வேண்டும் என்றே யாவரும் வேண்டுவர். யாரையாவது நீ ' இறக்க விரும்புகிருயா ' என்று கேட்டுப் பாருங்கள். விரும்புவார்களா இறப்பை? விரும்பமாட்டார்கள். ஆகவே அடிப்படையாக ஆராய்ந்தால் உயிர்கள் அனைத்தும் 'விரும்புவது உயிரை; வெறுப்பது இறப்பை' என்று துணியலாம்.

' சாதலின் இன்னுததில்லை ' என்ருர் திருவள்ளுவர். சாதலை மரணம் என்பர். மரண பயம் எல்லோரையும் ஆட்டிப் படைக் கிறது. ஒவ்வொருவனும் தான் வாழவேண்டுமென்று விரும்பு கிருன். நோயால் தொல்லையுற்று இன்ருே நாளையோ என்றிருக் கும் பிணியாளனுக்கும் வாழ்வில் ஆசையிருக்கிறது. கூனிக் குறுகிக் கோல் காலாகிக் குந்தி நடந்து நொந்து இருமியேங்கி நுரைத்தேறும் முதியவர்க்கும் வாழ்வில் விருப்பம் இல்லாமல் இல்லை. ஆனுல் சாதலை யாராலாவது தவிர்க்க முடிகிறதா பாருங்கள் ; அது ஒரு தவிர்க்க முடியாத தொல்லையாகவே இருக்கிறது. வாழவும் விருப்பமிருக்கிறது ; வாழவும் முடிவ தில்லை ; ஆம் ! இவ்வளவே உலகம் எனலாம்.

' தோற்றம் உண்டேல் மரணம் உண்டு
துயரமனை வாழ்க்கை '

என்ருர்கள் சுந்தரமூர்த்தி அடிகள்.

' உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு '

என்றார் திருவள்ளுவர்.

பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றதுண்மையின்''

என்றார் இளங்கோவடிகள். எனவே உலக இயல்பாக இருக்கிற இது நம்மளவில் இயல்வது அன்று என்ற ஓர் நம்பிக்கை நமக்கு இருக்கிறது. இதனை இயக்குபவன் இறைவன் ஒருவனேயாவான். அவனே காலனுக்கும் காலனாக விளங்குபவன். அவனது திருவடிப்பேற்றை அடைந்தாலொழிய வாழ்வில் நிலைத்த இன்பம் காண இயலாது. மரணமிலாப் பெருவாழ்வு அடைய இயலாது; பிறப்பு இறப்பு அற்ற பேரானந்தப் பெருங்கடலில் நாம் துளைந்து ஆட இயலாது என்பதனை நம் அநுபவ ஞானியர் கூறியுள்ளார் கள். அத்திருமொழிகளே நமக்கு வழிகாட்டித் துணை புரிவன. பிறவிக் கடலிலிருந்து நம்மைக் கரையேற்றக் கரங் கொடுப்பன. என்றும் நிலைபேறுடைய நம் உயிர்க்கு மாறிமாறிவரும் இம் மரணத் துன்பத்தை நீக்க அந்த ஆசிரியர்களாகிய குரவர் திரு மொழியே உதவிபுரிவன.

## திருக்கடவூர் :

சமய குரவர்களது அவ்வண்ணமாகிய திருப்பாடல் பெற்ற நம்நாட்டுத்தலங்கள் பலவற்றுள்ளும் சோழவளநாட்டுத் தஞ்சை மாவட்டம் மாயூரம் வட்டத்தைச் சார்ந்த திருக்கடவூர் மரண பயத்தைப்போக்கும் திருத்தலம். திருநேறி வளர்க்கும் திருக் கடவூர்; திருநேறி சிவநேறியாகிய அருள்நேறியே அல்லவா? அட்ட வீரட்டத் தலங்களுள் இது ஒன்று. மனிதர்களின் வாழ்நாளை நீட்டிக்கும் குன்றாத பேரருட்குன்றாக இங்கே வீற்றிருக்கின்றான் இறைவன். தன் மறக்கருணைத் திறத்தை இயமன் வாயிலாக வேளிப்படுத்திய திருவருள் வீறு இத்தலத் தின் சிறப்பு.

## மறக்கருணை :

அன்னை குழந்தையை அடிக்கிறாள்; முதுகுநோவ அடிக் கிறாள்; அலற அலற அடிக்கும் அவ்வன்னையின் உள்ளந்தான் எப்படி? பத்துத் திங்கள் சுமந்திருந்து பெற்றுப் பால் நினைந் தூட்டும் தாய் தான் அவள். அணைக்கவேண்டிய கரங்களால் அடித்துப் புடைக்கும் அவள் மனத்தில் அன்பு வற்றி விட்டதா? பாசம் பறந்துவிட்டதா மனத்தைவிட்டு! இல்லை அக்குழந்தை வாழவேண்டும்; திருந்தவேண்டும்; வளரவேண்டும் என்பதே அவள் ஆசை; இதய தாகம். இவ்வாறேதான் இறைவனின் மறக்கருணை. இறைவன் அறக்கருணையால் ஆன்மாக்களை ஆட்கொள்ளும் திறத்தோடுமட்டுமின்றி மறக்கருணை புரிவது இவ்வடிப்படையில்தான். இம்மறக்கருணைத் திறத்தை மாநிலம் உணர மாதேவன் நிகழ்த்திய திருத்தலங்களே வீரட்டத் தலங் கள். அவை எட்டு. அவற்றுள் கூற்றுவனை முன்வைத்து இறைவன் மறக்கருணை புரிந்த திருத்தலம் இத்திருத்தலமாகும்:

## பெயர்கள் :

திருக்கடையூர் என்று மக்களால் இன்று வழங்கப்பெறு கின்றது. தலையூர், இடையூர், கடையூர் என்று தமிழகத்து ஊர்கள் சிலவழங்கின எனவும், அவற்றுள் இது கடையூர் என்று வழங்கப்பெற்றது எனவும் ஒரு சாரார் கூறுவர். மற்றொரு சாரார் ஆண்டவன் அமுதக் கட (குட) மாக விளங்கினமையின் இது கடவூர் என்றிருந்து பின்னர்க் கடவூர் கடையூராயிற்று என்று கூறுவர். இறைவனும் அமுதகடேசன் என்று திருநாமந் தாங்கி யுள்ளான். புராணப்பெயர்களாக வில்வவனம், பிஞ்சிலவனம், என்பனவும் அமைகின்றன.

## மூர்த்தி :

இறைவன் அமிர்தலிங்கமாகவும், இறைவி அபிராமித் தாயாகவும், எழுந்தருளி யுள்ளனர். கள்ளவாரணப் பிள்ளையார், முருகன், இலக்குமி, சோமாஸ்கந்தர், நடராசர், வில்வவனநாதர், பிட்சாடனர், பைரவர். பஞ்சபூதலிங்கங்கள், சூரியன், அகத்தியர் சந்தனபூடண மன்னன், ஏழு கன்னியர், அருள்பெற்ற இயமன், அறுபத்துமூவர், முதலிய திருவுருவங்களும் உள்ளன. அருள் பெற்ற மார்க்கண்டேயர் திருவுருவமோ என்று எண்ணும் நிலையில் தேற்குத் திருச்சுற்று அடிமதிலில் ஓர் திருவுருவம் இருப்பது ஆய்தற்குரியது! கால சங்காரக்கடவுள் இயமனை உதைத்த திருக்கோலத்தோடு திகழுதல் பெருஞ்சிறப்பு. இவரை

வழிபடுவோர் வாழ்நாள் பெருகி வளம்பல பெற்று வாழ்தல் கண்கண்ட காட்சியாகும். 'காலக்கடவுட்கு உயர்கமா வலனே' என்ற பதிற்றுப்பத்துக் கடவுள்வாழ்த்துப் பகுதியைப் நினைப் பூட்டி நிற்கும் இத் திருக்கோலம்.

**தீர்த்தம் :**

தீர்த்தமாடுதல் தமிழ்நெறிக்கே சிறந்த மரபாகத் தோன்று தோட்டு விளங்கி வருவதாகும். தெற்கே குமரியாடுதல், வடக்கே கங்கையாடுதல் பெருஞ் சிறப்பினவாகப் பண்டுகொள்ளப் பெற்றிருந்தன. 'குமரியாடிப் போந்தேன் சோறுதாரும்' என்ற இலக்கணச் சோற்ருேடரை அறியாதார் யார்? தீர்த்த மாடுங்கால் திருவருள் நினைவோடு முழ்குதல் வேண்டும். பரம் போருளிற் ருேய்கின்ருேம் என்ற நினைவு நீங்கலாகாது. புனலாகி நிற்கும் பெருமானின் திருமேனியோடு ஒன்றுகின்ருேம் என்ற உள்ளநிலை உண்டாதல் வேண்டும்.

'எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
போங்கு மடு'

என்பது திருவாசகம் அல்லவா ? திருக்கடவூர்த் திருத்தலத்தும் அமிர்த புட்கரணி, காலதீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், காவிரிதீர்த்தம் என்ற தீர்த்தங்கள் புறந்தூய்மை, அகந்தூய்மை தந்து போலிகின்றன.

**வாழ்ந்து வழிபட்டோர் :**

' நாடாயிருந்தாலும் காடாயிருந்தாலும், மேடாயிருந்தாலும் பள்ளமாயிருந்தாலும் என்ன ? எங்கே ஆடவர் நல்லவராய் உள்ளனரோ அந்நிலமே நல்லது ' என்ற கருத்துப்பட உள்ள புறநானூற்றுச் சோல்லோவியம் இங்கு எண்ணி உணர்தற்கு உரியது.

'நாடா கோன்ருே காடா கோன்ருே
அவலா கோன்ருே மிசையாகோன்ருே
எவ்வழி நல்லவராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'



என்ற அப்பாடல் ஔவையாரின் அறிவுரைச் சித்திரம். இக் கடவூர்த் தலத்தும் அருளாளர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்கள் வாழ்ந்த தெய்வீகச் சிறப்பினுலேயே இன்றளவும் இத் திருத்தலம் திருவருள் போங்கித் ததும்பும் திருத்தலமாகத் திகழ்கின்றது. சமய குரவர்கள் மூவர் தேவாரத் தீந்தமிழும் இத் தலத்திற்கு உண்டு. குங்கிலியக்கலய நாயனுர், உய்யவந்த தேவநாயனுர், மார்க்கண்டேயர், காரி நாயனுர், அபிராமிபட்டர் ஆகிய அநுபவ ஞானியர் இத்தலத்தே வாழ்ந்து வழிபட்டனர்.

**இலக்கியம் :**

இலக்கியம் இல்லாத ஊருக்குப் பெருமை இல்லை. இலக்கியப் பெருமையே இணையற்ற பெருமை. காரிக் கோவை, தேவாரம், அபிராமி அந்தாதி, கள்ளவாரணப் பிள்ளையார் பதிகம், அமிர்தகடேசர் பதிகம், காலசம்மாரப்பின் முடுகு வேண்பா முதலிய இலக்கியங்கள் இத் திருத்தலத்தே எழுந்தன. இவற்றுள் காரிக்கோவை கிடைக்கவில்லை. தேவாரப் பாக்கள் திருமுறையில் திகழ்ந்து ஒளிவிடுகின்றன. உய்யவந்த தேவநாயனுர் திருவாக்கு மெய்கண்ட சாத்திரத்துள் மிளிர் கின்றது. அபிராமி அந்தாதி ஈழத்திலும் தமிழகத்திலும் சக்தியை வழிபடுவோர்க்குச் சிறந்த சாதன இலக்கியமாக ஒளிர்கின்றது. எனவே சாத்திர இலக்கியமும், தோத்திர இலக்கியமுமாகத் திருக்கடவூர் தமிழகத்துக்குத் திருநெறி வழங்கி நிற்கின்றது எனலாம்.

**திருவிழாக்கள் :**

கார்த்திகைத் திங்கள் சோமவாரத்தில் 1008 சங்காபிஷேகம் அமிர்தலிங்கப்பெருமானுக்கு நிகழும். மார்க்கண்டேய தீர்த்தத் துப் புனிதநீர் இச் சங்குகளில் நிரப்பப்பெற்றுப் பூசனை பெற்று மந்திரவலிமிக்குப் போலியும். காலசங்காரக்கடவுள் சித்திரைத் திருநாளில் ஆருந் திருநாளன்று வீதிகளுக்கு எழுந்தருளுவார். திருவிழாக் காலங்களில் நாடெங்கணுமுள்ள நல்லன்பர்கள் வந்து பரவியேத்தி இருமைப் பயனும் எய்துவர்.

**கல்வெட்டுக்கள் :**

திருக்கோயிலில் சுற்று மதில்களிலும், கருப்பக்கிரகத்திலும் பல கல்வெட்டுக்கள் உள்ளன. அரசியலார் இவற்றைப் படி யெடுத்திருக்கின்றனர். படியெடுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள்

ஐம்பத்துநான்கு. முதலாம் இராசராசன் காலம் முதல் மூன்றாம் இராசராசன் காலம் வரையுள்ள சோழ மன்னர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள். பாண்டிய மன்னர்களில் வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன் ஆகிய மூவர் வள்ளன்மை குறிக்கப்பட்டிருக்கின்றது. விஜயநகரப்பேரரசுக்கும் இத் திருக்கோயிலுக்கும் தொடர்பு இருந்த செய்தியும் இக் கல்வெட்டுகளால் புலப்படுகின்றது. கிருஷ்ண தேவராயரும், விருப்பண உடையாரும் என்ற இருவர் பற்றி அறிவதற்கு இத் திருக்கோயிற் கல்வெட்டுக்கள் துணைபுரிகின்றன. செயங்கோண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டுக் கடவூர் எனவும் பிறவாறுகவும் குறிக்கப்படுகின்றது. ஆக்கூர் ஒரு சிறந்த திருநகராக இருந்ததென்பதும், அது ஒரு நாடாகவே கருதப்பட்டதென்பதும், அதனுள் திருக்கடவூர் ஒரு ஊராக இருந்ததென்பதும் இவற்றிலிருந்து அறியப்படும். அன்றியும் வளநாடு, நாடு, ஊர் என்ற பகுப்பு முறை அக்காலத்தே இருந்தவேனவும், வளநாடுகள் மன்னர் பெயரால் வழங்கப்பெற்றன எனவும், அறியலாம். கோழும்பு மன்னன் ஒருவன் திருக்கடவூர்க் கோயிலைக் கட்டினன் எனவும், இக் கோற்றவன் காலகாலதேவர் மேல் இயற்றிய ஓர்பாடல் மூன்றாங் கோபுரத்தில் உள்ளது எனவும் கூறுகின்றனர்.

## சம்பந்தரும் திருக்கடவூரும் :

திருஞானசம்பந்தர் அம்பர்மாகாளம் முதலிய திருத்தலங்களை வழிபட்டு அடியவர்களோடு திருக்கடவூர் அடைந்தார்; திருநாவுக்கரசரும் அப்போது வந்தார். பல பதிகளை வணங்கிக் கோண்டு வந்த ஆளுடைய பிள்ளையாரையும், ஆளுடைய அரசரையும் குங்கிலியக்கலய நாயனர் எதிர்கோண்டு வரவேற்று விருந்து அளித்தார். கடவூர் வீரட்டத்துப் பெருமானைச் சம்பந்தர் போற்றிச் 'சடையுடையான்' என்று திருப்பதிகம் பாடினர். இவ்வரலாற்றுக் குறிப்பினைப்பாட வந்த சேக்கிழார் மிக்க அழகாகப் பாடுகின்றனர். 'காலனை உதைத்து உருட்டிய செய்ய் போற்சிலம்பணி தாமரை' என்ற தொடரால் இறைவன் திருவடியின் அருளாற்றலை இயம்புகின்ருர்.

வழிபடுவோர் 'பற்று அறுப்பவர்' என்று திருஞானசம்பந்தரை இவ்விடத்தே அழைத்துள்ளார்.



'மற்றவண் பதியணைந்து வீரட்டத்து மழவிடையார் கோயில்
சுற்றுமாளிகை வலங்கோண்டு காலனை உதைத்துருட்டிய செய்ய
போற்சிலம்பணி தாமரை வணங்கிமுன் போற்றி உய்ந்தெதிர்நின்று
பற்றறுப்பவர் 'சடையுடையான்' என்று பதிக இன்னிசைபாடி'

(பேரிய - திரு - 534)

திருஞானசம்பந்தர் சடையுடையானும் என்ற பதிகத்து ஒவ்வோர் பாடலிலும் இறைவனின் தன்மைகளை எடுத்தோதித் திருக்கடைக் காப்புச் செய்யுளில் பதிகப்பயன் கூறுங்கால் 'பாடியாடக் கேடும் பாவமே' என்றருளியுள்ளார். பாவம் கேடும் என்றருளிய அதனை உட்கோண்டே சேக்கிழார் வழிபடுவோர் 'பற்றறுப்பவர்' என்று அழைத்துள்ளனராதல் வேண்டும்.

திருக்கடவூர்ப் பெருமானை விட்டுப் பிரியச் சம்பந்தர்க்கு உள்ளம் வரவில்லை. நண்புக்கினியவராகிய குங்கிலிக்கலயரது நல்லுறவும், இறைவன்பால் வைத்த ஈடற்ற காதலுமே அதற்கு உற்ற காரணங்களாதல்வேண்டும். அன்பும் நட்புமாகிய இரு பண்பும் அவரைத் திருக்கடவூரை விட்டுப் பிரிதலில் மனந்தளரச் செய்திருக்கின்றன. சேக்கிழார் 'பரவி ஏத்தி அங்கு அரிதினிற் போந்து' (535) என்கின்ருர்; அதற்குற்ற காரணத்தைக் குறிப்பிப்பாராய், 'விரவு நண்பு உடைக் குங்கிலியக் கலயர்' என்று கூறி, அதற்கு மேலும் கலயரது விருந்தோம்புந் திறத்தையும் கனிந்த பண்பினையும்,

'கரையில் காதல் மற்றவர் அமைத்தருளிய விருந்து
இனிது அமர்ந்து'

என்ற தோடரால் புலப்படுத்தியுள்ள திறம் உன்னுதற்குரியது. கரையற்ற அன்புக் கடலாகிய வடிவினுல் அப் பேரன்பர் அளித்த பெரிய விருந்தைச் சம்பந்தர் இனிது விரும்பி ஏற்றுக் கோண்டார். திருக்கடவூர்த் திருமயானத்தையும் பணிந்தார்; அங்கே 'வரிய மறையார்' என்ற திருப்பதிகம் பாடினர். 'இரவும் பகலும் பரவி நினைவார் வினைகள் இலரே' என்ற திருக்கடைக்காப்போடு இலங்குகின்றது அவ்வினிய பதிகம்.

## அப்பரும் திருக்கடவூரும் :

திருநேரிசையில் கடவூர் வீரட்டனுரைத் தாம் கண்டு தேளிந்த நேறியை அப்பரடிகள் அருளியுள்ளார். குங்கிலியக் கலயனரது விளக்குத் தூபத் தோண்டினை நேரில் கண்டு

அவரோடு உறவாடும் வாய்ப்பும் பெற்ற அப்பரடிகள் அத் தோண்டினை இப் பதிகத்துள் போற்றிப் புகழ்ந்துள்ளார். 'பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போகமாதர் வெள்ளத் தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத்தூபம்' என்பது உலகவர்க்கு அடிகளின் அறிவுரை. அவ்வாறு விளக்கிடுவ தோடு அகவிளக்கும் இடுமின் என்னும் அடிகள் 'உள்ளத்த திரியொன்றேற்றி உணருமாறுணரவல்லார் கள்ளத்தைக் கடவூர் வீரட்டனுர் கழிப்பர்' என்று பயன் கூறியுள்ளார். பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி அரும்போடு மலர்கள் கொண்டு ஆர்வத்தால் விரும்பி நல் விளக்குத்தூபம் விதியினுல் இடவல்லார்க்குக் கரும்பினிற்கட்டி போல்வர் கடவூர் வீரட்டனுர் என்பதும் அடிகளாரின் உபதேசம். மேலும் 'பொருத்திய குரம்பை தன்னுட் பொய்ந்நடை செலுத்துகின்ற' பூதலத்தவர்க் கெலாம் இடித்துக் கூறிக் 'கருத்தினில் இருப்பர்' என்று கனிந்த நெறிதன்னைக் காட்டுகின்றுர் அப்பரடிகள்.

'மாலினைத் தவிர நின்று மார்க்கண்டற் காகவன்று
காலனை உதைப்பர் போலும் கடவூர் வீரட்டனுரே'

என்று மார்க்கண்டேயர்க்கு அருள்புரிந்த திருவருளையும் அடிகள் பரவியுள்ளார்.

'வெங்கூற்றம் பதைப்ப உதைத்துங்ஙனே
உருட்டிய சேவடியான்'

என்றும்,

'தோடர்ந்தடர்ந்தோடி வந்த
காலனைக் காய்ந்த பிரான்'

என்றும், கடவூர் உறை உத்தமனின் அருட்புகழைத் திருவிருத் தத்தே அடிகள் தொடுத்துள்ளார்கள். திருக்குறுந்தொகையிலும் 'கனைக்கும் ஆனைகண்டீர் கடவூரரே' என்று இறைவன் தன் மையை அநுபவஞானம் தோய்ந்த அருந்தமிழாக்கியுள்ள அடி களுக்கு என்ன கைமாறு நாம் செய்வோம்; அவர்கள் அருளிய அகங்கனிந்த பாமலர்களால் அமிர்தலிங்கப்பெருமானை அருச்சிப் பதல்லால் வேறு ஒன்றும் இல்லையல்லவா ?

**சுந்தரரும் திருக்கடவூரும் :**

சுந்தரமூர்த்தி அடிகள் தம்வாழ்வின் துணையாக-விழுத்துணை யாக வீற்றிருக்கும் கடவூர் உறையும் உத்தமனைக் கண்டு உருகி



உருகி வழிபட்டிருக்கிறுர்கள். 'அடிகேள் ! என்னமுதே எனக் கார்துணை நீயலதே' என்று பாடல்தோறும் கேட்கிறுர்கள். 'உயிர்கோடுத்தாய் மறையோனுக்கு' என்று மார்க்கண்டேயர் வரலாற்றை நினைவு கூர்கின்றுர்கள். திருக்கடைக்காப்பிலே,

'காராரும் பொழில்சூழ் கடவூர்திரு வீரட்டத்துள்
ஏராரும் இறையைத் துணையாவெழில் நாவலர்கோன்
ஆரூரன் அடியான் அடித்தோண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பாரே'

என்று அருளினுர்கள். 'துணையா'கக் கூறிய தமிழ் என்ற தோடரிலிருந்து, வாழ்வேனும் கடலில் வீழ்ந்து வருந்தும் மனித குலம் துணையெனக் கொள்ளத்தக்க உயிர்த்துணைவன் விழுத் துணைவன் அமிர்தலிங்கப்பெருமான் ஒருவனே என்று உணர லாகும். அத்துணையே மெய்த்துணே. வேறு வேருக நாம் கருதி வருகின்ற பதவியோ, பணமோ, பாரறியும் புகழோ நமது உயிர்க்குத் துணையாவன என்று எண்ணுவது அறியாமை.

'மத்தயானை ஏறிமன்னர் சூழ வருவீர்காள் !
சேத்தபோதில் ஆருமில்லை சிந்தையுள் வைம்மின்கள்'

என்பது சுந்தரர் செந்தமிழ் அல்லவா ? இத்துணையின் விழுப் பத்தை நமக்குக் காட்டுகின்றுர்கள் சுந்தரமூர்த்தி அடிகள்.

அபிராமிபட்டர், ஸ்ரீ அபிராமி அம்மையையே விழுத்துணை யாக நம்பிப் பரவி நலம் பெற்ற வரலாறும் இங்கு எண்ணத் தக்கது.

'உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கோடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே'

என்பது அபிராமி அந்தாதியின் முதல் திருப்பாடல்.

**அருள் அரசு :**

இத்துணை அருள் நலம் போதிந்த திருநகராகிய திருக்கட வூர்த் திருத்தலத்தே ஓங்கும் அமிர்தகடேசுவரர் திருக்கோயில்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான இருபத்தேழு திருக் கோயில்களில் ஒன்றாகும். இப்போது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதான மாக வீற்றிருப்பவர்களும், சமயம், சமூகம், மொழி, ஆலயத் திருப்பணிகளையே சிறந்து புரிந்து அருள் அரசு ஓச்சுபவர்களு மாகிய இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிர மணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருக்கடவூர்ப் பெருமானிடத்தில் இதயம் தோய்ந்தவர்கள். அபிராமித்தாயினிடத்தில் அளவற்ற அன்பு பூண்டவர்கள். விரோதி ஆண்டில் இத் திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்து குடமுழுக்கு விழா நிகழ்த்திய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் மீண்டும் 1957 ஆம் ஆண்டில் திருக்கோயில் திருப்பணிகளைச் சிறக்கச் செய்து குடமுழுக்கு நிகழ்த்தத் திருவுளம் கொண் டார்கள்.

## குடமுழுக்கு :

இராசகோபுரங்கள், சுவாமி திருக்கோயில், அம்பாள் திருக் கோயில், திருக்குளம், சுற்றுத் தளவரிசை முதலியன திருந்தின. கண் கவர் சிற்பங்களும் வண்ண ஓவியங்களும் நிறைந்த கலைக் கூடம் ஆயின. எல்லாமூர்த்தங்களும் மருந்துசார்த்தப்பெற்றன. ஜீரணோத்தாரணம் புரிவித்து குடமுழுக்கு நிகழ்த்த ஆணை யிட்டார்கள். திருவருளும் அருளாணையும் குருவருளும், துணைநிற்கச் செயலாயிற்று. ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமியும், ஸ்ரீ அபிராமி அம்மையும் முன்னின்று திருப்பணிகளை ஏற்றுக் கொண்டார்கள். ஹேவிளம்பிஷு சித்திரைமீ 9உ (21-4-57) ஞாயிற்றுக்கிழமை காலை மணி 9-15 க்குமேல் 11-30 க்குள் குடமுழுக்கு விழா. தமிழகத்துச் சைவர் முதலிய மெய்யன்பர் களெல்லாம் தவறாது தரிசித்து இருமைப்பயனும் எய்தி இன்புறும் வாய்ப்பு இது. ஸ்ரீ காலசங்காரக்கடவுளை வணங்கி வாழ்நாள் பெருக்கும் வகையில் அன்பர் கூட்டம் கோடானுகோடியாகக் கூடி வழிபடும் இக் குடமுழுக்கு நாளிலே. அதனை ஒட்டிச் சைவ சித்தாந்த மாநாடு நிகழ இருக்கிறது. எல்லாம் ' கண்ணுக் கினிய பொருளாகிக் ' குருஞானசம்பந்தர் கரத்து வந்து தருமை ஆதீனத்து ஆன்மார்த்த மூர்த்தியாக எழுந்தருளியிருக்கின்ற சொக்கலிங்கமும் அமிர்தலிங்கமுமாகிய ஞானமூர்த்தங்களின் திருவருள் விரிவே என்பது துணிவு.

---



# முப்பொருள் விளக்கம்

வித்துவான், திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள்,

தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

(மலர் 16, இதழ் 4, பக்கம் 255 இன் தொடர்ச்சி)

**மாணாக்கன் :**

' அழித்தற் கடவுள் ' என்பதுபற்றியே உலகம் ஒடுங்குதலை ஏதுவாக வைத்து, உலகம் அவனிடத்தே தோன்றும் எனக் கூறின், ' படைத்தற் கடவுள் ' என்பது பற்றியே உலகம் தோன்றுதலை ஏதுவாக வைத்து, ' உலகம் படைத்தற் கடவு ளிடத்தே ஒடுங்கும். அவனிடத்துத் தோன்றுதலால், யாது யாண்டுத் தோன்றும், அஃது அதன்கண் ஒடுங்கும், மண்ணிற் குடம்போல ' என மாறிக் கூறுதலும் செல்லுமன்றோ ?

**ஆசிரியர் :**

அற்றன்று, ' படைத்தற் கடவுள், காத்தற் கடவுள், அழித்தற் கடவுள் ' என மூவர் கடவுளர் உளர் என்பதனால், காணப்பட்ட இவ்வுலகம் ' படைத்தற் கடவுளால் படைக்கப் பட்டது ' என்பதும், ' காத்தற் கடவுளால் காக்கப்படுகின்றது ' என்பதும், ' அழித்தற் கடவுளால் அழிக்கப்படும் ' என்பதும் துணியப்பட்டமையின், ' இவ்வுலகம் ஒடுங்குங் காலத்து யாவனிடத்து ஒடுங்குமோ ? ' என்னும் ஐயத்திற்கிடனின்றாம். ஆகலின், அதனை ஐயுற்றுத் துணியலுறின், ' தேரான்தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும் தீரா இடும்பை தரும் ' (குறள்-510) என்னும் முறைமைத்தாய்த் ' துணிந்தானைத் துணிதல் ' என்னும் குற்றப்பட்டுப் போலியாம். அஃதாவது, முயற்குக் கோடு இன்மை துணியப்பட்டதாகவும், அதனை ' முயற்குக் கோடு உண்டோ ? இல்லையோ ? ' என ஐயுற்று, ' முயல் கோடுடைத்து, விலங்காதலுடைமையால்; யாது விலங்காத லுடைத்து, அது கோடுடைத்து, ஆப்போல ' என்றல்போல்வதாம் என்க.

இனி, உலகம் முழுவதும் ஒடுங்கிய பின்னர் மீளத் தோன்றுங்கால் மூவருள் இன்ன கடவுளிடத்துத் தோன்றும் என்பது அறியப்படாமையின், 'ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுங்கால் யாவனிடத்துத் தோன்றும்?' என்னும் ஐயம் நிகழுமாகலின், அது கருதலளவையால் துணியற்பாலதேயாம். 'ஒடுங்கிய உலகம் மீளத்தோன்றுங்கால் யாவனிடத்துத் தோன்றும்?' என்னும் ஐயத்தின்கண், 'படைத்தற் கடவுள்' எனப்படுவதனுன் அவனிடத்தினின்றே தோன்றும்' என முதல் உணர்ச்சி நிகழ்வுழி, 'அது, சற்காரிய முறையன்ருகலான் 'உலகம் தான் ஒடுங்கிய இடமாகிய அழித்தற் கடவுளிடத்தி னின்றே தோன்றும்' என அளவை நெறியான் முடிபாகத் துணியப்படும் என்க.

எனவே, உலகம் படைத்தற் கடவுளிடத்தே ஒடுங்கும்' எனல், காணப்பட்ட உலகத்தின் மேலதாகலின், அது மாறு கோளுரையாம். 'உலகம் அழித்தற் கடவுளிடத்தே தோன்றும்' எனல் அன்னதன்றி ஒடுங்கிய பின் மீளத்தோன்றும் உலகத்தின் மேலதாகலின் உண்மை முடிபேயாம். இதுபற்றியன்றே 'உலகம் அழித்தற் கடவுளினின்று தோன்றிற்று' என்னுது, 'மீளத் தோன்றும்' என்றது என்க.

இன்னும், அழித்தற் கடவுள் உலகமுழுவதையும் அழிக்குங் கால் சிலரை ஒழித்து அழிப்பன் என்றற்கு ஒரு காரணம் இல்லையாம். அவ்வாறு சிலரை ஒழித்து அழிப்பன் என்றே முரணிக் கூறின், உலகம் முழுவதூஉம் ஒடுங்கிற்றெனல் கூடாது. அன்றியும், அழித்தற் கடவுள் உலகம் முழுவதையும் அழிக்குங்கால் சிலரை அழியாது விடுத்தற்குக் காரணம் என்னே? என்பார்க்கு, 'அவரும் தன்போலக் காரணக் கடவுளராதல்பற்றி' எனல் வேண்டும். அங்ஙனம் கூறின், உலகிற்கு ஒருவன் முதற் கடவுளாகாது மூவர் முதற் கடவுளராதல் சேல்லும்; அது கூடாமையான், இறுதிக் காலத்து ஏனை இருவரும் உலகத்தோடு ஒருங்கே அழித்தற் கடவுளிடத்து ஒடுங்க, அவன் ஒருவனே யாண்டும் ஒடுங்குதலின்றித் தனித்து நிற்பன் என்பது பேறப் படுதலின், மீள உலகத்தைத் தோற்றுவிக்குங்கால் அவனே தோற்றுவிப்பன் என்பது ஐயுறவின்றித் தெளியப்படும் என்க.



" இறுதியாங் காலந் தன்னின் ஒருவனே; இருவ ருந்தம்
உறுதியின் நின்ருர் என்னின் இறுதிதான் உண்டாகாதாம்;
அறுதிஇல் அரனே எல்லா மழித்தலால் அவனுல் இன்னும்
பெறுதும்நாம் ஆக்கம் நோக்கம் பேரதி கரணத் தாலே. "

என்பது சிவஞானசித்தி.

இங்ஙனம், அழித்தற் கடவுளை யொழித்து ஒழிந்த ஏனையோர் யாவரும் இறுதி எய்துதல் பற்றியன்றே,

" நூறு கோடி பிரமர்கள் நொந்தினுர்;
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே;
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்;
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே. " (திருமுறை - 5)

என்றருளிச் செய்ததென்க.

இறுதிக் காலத்து, அழித்தற் கடவுள் ஒருவனே உளன். ஆண்டுப் பிறரில்லை என்பது பற்றியன்றே,

" படுபறை பலஇயம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கோடுகோட்டி ஆடுங்கால் கோடுயர் அகலல்குல்
கோடிபுரை நுசுப்பினுள் கொண்டசீர் தருவாளோ. "

(கலித்தொகை கடவுள் வாழ்த்து)

எனக் கூறினுர் சங்கத்துச் சான்றேரும் என்பது.

இறைவன் உலகம் யாவும் ஒடுங்கிய காலத்தும் ஒடுங்காது நிற்றல்பற்றியே அவனுக்குக், 'கோயில் சுடுகாடு' (திருவாசகம் திருச்சாழல் 3) எனப்பட்டது. இஃதறியாதார், 'உருத்திரன் இடம் சுடுகாடு; அதனுல், அவ்விடத்தைத் தீண்டுதல் கூடாது' எனக் கூறியொழிவர்; மேற்கூறியவாற்ருல் உலகம் யாவும் உருத்திரனது இடமேயாகலின், அவர் அதனைத் தீண்டாதொழிதல் யாங்ஙனம் என்க. அன்றியும் உருத்திரனுக்கு அடிமை பூணுதார் அவ்வுருவத் திறனையும், அவனது இடத்தையும் காணினும், கேட்பினும் அச்சுறுதல் இயல்பேயென்ருெழிக.

இவ்வாற்ருன் இறைவன் உலகமெல்லாம் ஒடுங்கிய காலத்துத் தான் ஒடுங்காது நின்று, அவ்வுலகம் மீளத் தோன்று தற்கு வேண்டுவன செய்வன் என்பது பெறப்படும். அதனைக்,

" கரிகாடர் காலோர் கழலர்—வேயுட ஞகு தோளி யவள்விம்ம வெய்ய மழுவீசி வேழவுரிபோர்த்—தேயிவர் ஆடுமாறும் இவள் காணு மாறும் இதுதான் இவர்க்கோ ரியல்போ ", " உறைவது காடுபோலும் ", " பிறைநுதல் பேதை மாதர் உமையென்னும் நங்கை பிறழ்பாட நின்று பிணைவான் " (திருமுறை 4 பதிகம் 8) என்றற் றொடக்கத்துத் திருமொழிகள் நோக்கி யுணர்ந்துகோள்க.

மாணுக்கன் :

அற்றேல், அழித்தற் கடவுளை உலகிற்கு நிமித்த காரணன் எனக் கூறுதலானும், உலகம் முதற் காரணத்தின் கண்ணே ஒடுங்கித் தோன்றல் வேண்டுமாகலானும் உலகம் மாயையின் ஒடுங்கித் தோன்றும் என்னுது, ' அழித்தற் கடவுளிடத்தே ஒடுங்கித் தோன்றும் ' என்றதென்னை ?

ஆசிரியர் :

உலகம் மாயையின் கண்ணே ஒடுங்கித் தோன்றுமாயினும், வித்து நிலத்தின்கண்ணேகிடந்து அது குளிர்ந்தவழி முளையைத் தோற்றுவித்தல் போல, மாயை இறைவனது ஆற்றலின்கட் கிடந்து, அவ்வாற்றல் எண்ணமாய் நின்றவழியே உலகத்தைத் தோற்றுவிக்கும். அதனுல், வித்தினின்றும் தோன்றிய முளையை நிலத்தினின்றும் தோன்றியதாகக் கூறுதல் அமைவுடைத்தாதல் போல, மாயையினின்றும் தோன்றிய உலகத்தை அதற்கு நிலைக்களனுகிய இறைவனிடத்தினின்றுந் தோன்றியதாகக் கூறுதல் அமைவுடைத்தேயாம் என்க. வித்தினின்றும் தோன்றியதனை நிலத்தினின்றுந் தோன்றியதாகக் கூறு மாற்றினைக் கிழங்கினின்றும் தோன்றும் தாமரையைச் " சேற்று வளர்தாமரை " (புறநானூறு - 27) எனவும், ' பங்கசம் ' (சேற்றிற் பிறப்பது) எனவும் வருதல் பற்றி உணர்ந்துகோள்க.

" வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர் வினையால்—வித்தகமாம்
.........மண்போற் குளிர்ந்து. "

என்பது சிவஞானபோதம்.



இங்ஙனம், உலகிற்கு முதனிலைப்பொருளாயுள்ள மாயைக்கு இன்றியமையாத நிலைக்களன் இறைவன் என்பதுணராத மாயோன் சமயத்தோரும், சிவாத்துவித சைவரும் முறையே, ' இறைவனே உலகிற்கு முதற்காரணம் ' எனவும், 'இறைவனது ஆற்றல் உலகிற்கு முதற்காரணம்' எனவும் கூறி, 'இறைவனே உலகமாய்த் திரிந்து நிற்பன் ' எனவும், ' இறைவனது ஆற்றல் உலகமாய்த் திரிந்து நிற்கும் ' எனவும் கூறுவர். இறைவன் எனினும் இறைவனது ஆற்றல் எனினும் அறிவுடைப் பொருளேயாகலான், அறிவுடைப் பொருள் அறிவில்பொருளாகிய உலகத்திற்கு முதற்காரணமாதலும், உலகமாய்த் திரிந்து நிற்றலும் எவ்வாறு கூடுமென்க.

மாணுக்கன் :

அற்றேல், ' வாசுதேவனே பிரகிருதி ' எனச் சுருதி கூறும் என்பவாகலின், உலகம் அவனிடத்து ஒடுங்குமென்றலே பொருத்தமுடைத்துப்போலும் !

ஆசிரியர் :

அறிவில் பொருளாகிய பிரகிருதியை அறிவுடைய வாசுதேவனுகக் கூறுதல் பொருந்தாது. எவ்வாற்ருலேனும் பொருத்தங் கூறினும், பிரகிருதி என்பது மாயையின் ஒரு பகுதி என்பது அவற்றின் இயல்பு கூறுமிடத்துப் பெறப்படுமாகலின், உலக முழுவதும் பிரகிருதிக்கண் ஒடுங்காதென்க. எனவே, உலகம் முழுவதும் அழித்தற் கடவுளிடத்தே ஒடுங்கி மீளத் தோன்றும் என்பது பெறப்படுதலான், ஏனைப் படைத்தற் கடவுளும், காத்தற் கடவுளும் அவனிடத்தே ஒடுங்கி மீளத் தோன்றுவர் என்க.

" ... ... ... ... ... ... ... ... ...இலயித்தது
அத்திதியில் என்னின் அழியாது, அவை அழிவது
அத்திதியும் ஆதியுமாம் அங்கு. "

என்பது சிவஞானபோதம்.

வாசுதேவனைப் பிரகிருதி என்றதுபோலன்றி, மகேசுவரனை " மாயையை உடையவன் " என்று சுருதி கூறும் என்க.

("மாயையைப் பிரகிருதி என்றும், மாயையை உடையவன் மகேசுவரன் என்றும் அறிக.") உலக முழுவதும் அழித்தற் கடவுளிடத்தே ஒடுங்கித் தோன்றும் என்பது பற்றியன்றே, "நீலமேனி வாலிழை பாகத்து - ஒருவன் இருதாள் நிழற்கீழ் - மூவகை யுலகமும் முகிழ்த்தன முறையே" (ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து) எனவும், "யாழ்கெழு மணிமிடற் றந்தணன்- தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே" (அகம் கடவுள் வாழ்த்து) எனவும் கூறப்பட்டன என்க.

இங்ஙனம் உலகம் அழித்தற் கடவுளிடத்தே ஒடுங்கித் தோன்றும் என்பது பெறப்பட்டதனுல். படைத்தல் அழித்தல் என்னும் இருதொழிலும் அவனுடையனவே என்பதாயிற்று. அதனுனே, இடைநின்ற காத்தல் தொழிலும் அவனுடைய தென்பது தானே போதலால் முத்தொழிற்கும் முதல்வன் அழித்தற் கடவுளே என்பது போந்தது. அதனுல், படைத்தற் கடவுளைப் படைப்பவனும், காத்தற்கடவுளைக் காப்பவனும் அவனே என்பது விளங்கும்.

"... ... ... ... ... ... ... ... ... முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன்; படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள்; காப்பவை
காப்போன்." (திருவாசகம் திருவண்டப்பகுதி)

என்றருளிச் செய்தமை காண்க.

இதனுன் எவ்வாற்றுனும், உலகம் அழித்தற் கடவுளிடத்தே ஒடுங்கியும், தோன்றியும் வரும் என்பது பெறப்பட்டமையான். முத்தொழிற்கும் முதல்வன் அவனே என்பது முடிந்தது.

(தொடரும்)

---

### தனிச் செய்யுள்

பற[1]வை யோன்றின் கீழானுன் பற[2]வை யோன்றின் மேலானுன்
பற[3]வை யோன்றைப் படைகோண்டான் பற[4]வையோன்றை யிடங்
கோண்டான்
பற[5]வை யோன்றின் மேனியனைப் பற[6]வை யோன்றுக் கேவினுன்
பற[7]வை யோன்று போலாலம் பருகு மேங்கள் பெருமானே.

கோக்கு[1], நரையான்[2], சாதகம்[3], நிலாமுகி[4], குயில்[5], காக்கை[6], அன்னம்[7].

# பெரும்பாணாற்றுப்படை- இலக்கியவளம்

வித்துவான். திரு. சொ. சிங்காரவேலனுர் அவர்கள்
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

(மலர் 16, இதழ் 3, பக்கம் 193 இன் தொடர்ச்சி)

**சங்ககால உணவு வகைகள் !**

உணவு வகைகளாக இக் கவிஞர் குறித்துள்ளன அக்காலப் பண்பை விளக்குவன எனலாம். அவற்றை இங்குச் சிறிது காண்போம்.

உவர்நீரில் புல்லரிசியைப் போட்டு வேகவைத்து அரியாது ஆக்கிய சோற்றை உப்புக்கண்டத்தோடே உண்ணுதல் என்ற வழக்குச் சிலர்பால் இருந்தது. (95-100) பன்றித் தசையையும். முயலையும் பக்குவப்படுத்தி உண்ணுதலும் உண்டு. (115) மேட்டுநிலத்துச் செந்நெல் சோற்றினை உடும்பின் பொரியலோடு உண்டலும்சிலர் வழக்கம். (133) நல்ல எருதுகளை அடித்துத் தின்று தோப்பிக் கள்ளைப் பருகினர் சில மக்கள். (142) நண்டின் முட்டைகளைப்போன்ற தினைச்சோற்றைப் பாலொடு கலந்து உண்டலும் பழய வழக்கமே. (167) வரகின் சோற்றை அவரைப் புழுக்கலோடு இணைத்து உண்ணுகின்ற கும்மாயம் என்ற உணவு வகையும் உண்டு. (195) இக்காலத்துப் புழுக்கிய பச்சைப் பயற்றோடு சக்கரை முதலியன கலந்து ஆக்கப் படுவதோர் சிற்றுண்டியாய் வழங்குகிறது. வெண்ணெல் சோற்றைக் கோழியின் வாடிய இறைச்சியோடு கலந்து உண்ணுவர் சிலர். (256) அரிசியைக் களியாகக்கிண்டி ஆற வைத்து மீன்சூட்டு, கள் இவற்றோடு உண்பர் சிலர். (280) அந்தணர் சேரியிலே இராசான்னம் என்கின்ற நல்ல நெற்சோறு செய்யப்பெறும். அன்றியும் கொம்மட்டி மாதுளங்காய் மிளகு போடி கலக்கப்பட்டுக் கருவேப்பிலை அளாவப்பட்டு நறுமணம் வீசும் மோரின்கண் கிடந்து ஊறி அதனுடன் மாவடுக்களும் கலந்த ஊறுகாய் அங்கு செய்யப்பெற்றது. (305) கொழுப் பேறிய பன்றிக்கடாவின் நிணத்தடியும், கள்ளுமாகச் சிலரும்

உண்டனர். (345) அப்ப வாணிகர் அப்பம் செய்தனர். பாகுடன் வேண்டுவன கூட்டிச் செய்த நூல்போலச் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம் எனப்படுவதால் இப்போது 'இடியப்பம்' என வழங்கப்பெறுவதே இவ்வாறு குறிக்கப்பெற்ற தெனக் கொள்ளலாகும். (378) இவையே பெரும்பாணுற்றுப்படையிலிருந்து நாம் அறியும் உணவு வகைகள். இவற்றைப் பற்றிய குறிப்புக்களை இந்நூலுள் ஆங்காங்குக் காணலாம்.

**பண் குறிப்பு :**

குழலையும் யாழையும் பற்றிய குறிப்பு இந்நூலின் இடையிலும் ஓரிடத்தே வருவது குறிப்பிடற் குரியதாகும்; 'தீக்கடைகோலாலே புகை முற்பட எழும்படி கையாலே கடைந்துகொண்ட சிவந்த நெருப்பினை உடைய கடைக் கொள்ளியாலே துளையிட்ட கரிய துளைகளை உடைய குழலால் எழுப்பின மிகவும் இனிய பாலை என்னும் பண்ணைத் தான் வெறுத்தால், குமிழினது உட்போய்யாகிய கோம்பிடத்தே வளைத்துக் கட்டின மரற்கயிறுகிய விரலாலே தெறித்து வாசிக்கும் நரம்பினை உடைய வில்லாகிய யாழொலிக்கும் குறிஞ்சி என்னும் பண்ணைப் பாடுவர் இடையர்' (177-182) என்று வரும் பகுதி இக்குறிப்பை நன்கு விளக்குவதாகும் அல்லவா?

**நச்சினார்க்கினியர் உரைநலம் :**

நச்சினார்க்கினியர் பெரும்பாணாற்றுப் படைக்கு எழுதியுள்ள உரையை நடுவுநிலைமையில் நின்று ஆராய்ந்து நன்மை தீமை காண்டல் அறிவறிந்தோர் கடன் ஆகும். நச்சினார்க்கினியர் நல்ல உரையாசிரியர். கொண்டு கூட்டிப் பொருட் புதுமை காணுதலில் இவர்க்கு உள்ளமிகுதி. அஃது ஆசிரியர் கருத்தாகுமா என்று இவர் ஆராய்வதில்லை. தொடக்கத்திலேயே இவரது இவ்வியத்தகுதிறனைக் காண்கின்றோம்.

'அகலிரு விசும்பு' (1) என்பதற்கு உரை யெழுத வந்தவர் 'தன்னை யொழித்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமான ஆகாயத்தே' என்கின்றார். இது மதுரைக் காஞ்சியில் அவருரைப்பகுதியை (266-67) நினைப்பூட்டுகின்றது.



'புல்லென் யாக்கை புலவுவாய்ப்பாண' (22) என்றவிடத்துப் 'புலவுவாய்' என்பதற்கு இவர் கூறும் விளக்கம் இனியது. 'கற்ற கல்வியினை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுமுடைய பாண' என்ற உரைப்பகுதி எண்ணி எண்ணி இன்புறற்குரியது.

'கைப்பொருள் வெளவும் களவேர் வாழ்க்கை' (40) என்புழிக் களவேர் வாழ்க்கையை விரித்துரைக்குங்கால் 'களவே உழவுபோலும் இல்வாழ்க்கைப் பொருளாக உடைய' என்றனர். இது ஒரு நயமான பகுதியாகும்.

'சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப' (78) என்ற வரியின் மருங்கே 'நல்லபழம் சுளைமிக இராதென்றார்.' என்றெழுதிய நச்சினார்க்கினியர் உரைநலம் உச்சிமேற் கொள்ளத்தக்க ஒன்றே அன்றோ? 'செல்நாய் அன்ன கருவில் சுற்றமொடு' (139) என்றவிடத்துத் 'தான் குறித்த விலங்கின்மேலே செல்கின்ற நாய் அதனைத் தப்பாமற் கொள்ளுமாறு போன்ற' என்று விரித்தெழுதுதல் இன்புறத்தக்கது.

'குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்' (197) என்புழி 'ஒருசால் இருசால் என்றல் உழவுத் தொழிற்கு மரபு' என்று எழுதுதல் தொழில் நுணுக்கமறிந்த இவரது பேரறிவினைப் புலப்படுத்துவதாகும்.

'பாம்புறை மருதின் ஓங்குசினை நீழல்' (232) என்றவரியின் உரையில், 'பழைய மரமாதலிற் பாம்பு கிடக்குமென்றார்' என்றது ஓர் இனிய உரைப்பகுதி.

'ஏணி எய்தா நீணெடுமார்பின்' (245) என்றவிடத்து நீள், நெடு என்ற அடைகளைப்பிரித்து நீள் ஏணி என்றும் நெடுமார்பு என்றும் கூட்டிப் பொருள் செய்த புதுமை பாராட்டற்குரியது.

'பறவைப்பெயர் படுவத்தம்' (305) என்றதன் உரையில், 'இராசான்னம் என்னும் பெயர் பெறுகின்ற நெல் என்றவாறு; ஆகுதி பண்ணுதற்கு இந்நெல்லுச் சோறே சிறந்ததென்று இதனைக் கூறினார். மின்மினி நெல்லென்பாருமுளர்; இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையும் உணர்க' என்றெழுதுமிடம் ஆராய்வுத்திறனுக்கோர் சான்றும்.

'யவனர், ஓதிம விளக்கின் உயர்மிசைக்கோண்ட' (316) என்புழி, சிரல் வெள்ளன்னத்தோடு ஒப்பாகாதேனத் துணிந்து ஈண்டுக் 'காரன்னமென்றுணர்க' என்று எழுதும் பகுதிக்குக் கோடி கோடுப்பினும் தகும். 'வாடா வள்ளியின் வளம்பல தருவம்' என்பதன் உரையில் (370) 'வளம்பல என்றூர், இக்கூத்து ஆண்பாற்கும் பெண்பாற்கும் போதுவாய் வருதலின்' என்று எழுதுதல் தலைசிறந்த இடமாகும்.

'நிழல்தாழ் வார்மணல் நீர் முகத்து உறைப்ப' (379) என்பதன் உரையில், 'உறைப்ப' என்ற சோல்லுக்கு மிக விழும்படி எனப்போருள் உரைத்து, 'உறைப்ப என்றதனைத் துளிப்ப என்றூல் ஈண்டு ஒப்பன்மையான் உப்புறைப்ப என்றூற் போலக் கோள்க' என்று விலக்குதல் போற்றற்குரிய இடம்.

'வழங்குநர்த் தடுத்த அடையா வாயில்' (400) என்புழி, 'உலகத்துக் கோடுப்பாரைக் கோடாமல் தடுத்த பரிசிலர்க்கு அடையாத வாயிலினையும்' என்று எழுதி, 'இவன் கோடைப் பெருமையால் பிறர் தவிர்ந்தார்' என்று விளக்குதல் வியத்தகு புலமைக்கோர் சான்றேபாகும்.

'வானம் சூடிய மலர்தலை உலகம்' என்று (409) இடத்து, 'ஆகாயம் கவிந்த அகன்ற இடத்தையுடைய உலகம்' என்று போருளேழுதியிருத்தல் இனியது.

'மள்ளர் மள்ள' (455) என்புழி வீரரிற் சிறந்த வீரனே என்று போருளேழுதாது 'வீரர்க்கு வீரத்தைக் கோடுக்கின்ற வனே' என்றும், 'சேல்வர் சேல்வ' (456) என்புழி 'சேல்வ முடையோர்க்கும் கோடுத்தலை விரும்புபவனே' என்றும் போருள் எழுதியிருத்தல் மிக இனிய உரைப்பகுதியே யாதலை யாவரும் உணரலாம்.

'நின்னிலை தேரியாவளவை' (464) என்புழி 'நின் வறுமை நிலை தேரிவதற்கு முன்னே' என்று சிறப்பின்றி எழுதிவிடாது, 'நின்னுடைய கலைகளேல்லாம் தேரிவதற்கு முன்னே' என்று எழுதுதல் இதயம் தோடும் ஓர் இடமாம். நின்பால் நிலை என்றதனுன் நிலையாக இருப்பது கலையே என்பது உணர்ந்து எழுதுவது இவ்விடமாம். வறுமை நிலையாகாது; அது தோண்டைமான் பரிசுகள் பெறின் தோலைவதே யன்றே?



இன்னேரன்ன பிற இடங்களால் நச்சினூர்க்கினியர் இந்நூ லுக்கு எத்துணை நலம் சான்ற நல்லுரையினை நல்கியுள்ளார் என்பதனை இனிதே அறியலாம். இவ்வுரையாகிய விழுத்துணை இன்றேல்' உருத்திரங்கண்ணனுரது - வழிகாட்டும், வண்டமி ழாகிய' இவ்வாற்றுப்படையின் எழில் நலங்களை நம்மனேர் உணர்வது பேரிதும் அரிதாகும்.

**நச்சினூர்க்கினியர்**

நச்சினூர்க்கினியர் நல்லுரை நம்மனேர்க்கு இந்நூலை அறிய விழுத்துணையாய் உதவினுலும் அதனூடே இருக்கும் பிறவற் றையும் நாம் அறிதல் வேண்டுவதே. ஆசிரியர் நச்சினூர்க் கினியர் வேண்டுமேன்றே வலிந்து சில இடங்களில் போருள் எழுதுகின்றூர். இது ஆசிரியர் கருத்தாயிருக்குமோ என்று துணிந்து எழுதிவிடுகின்றூர். இது ஓர் ஆராக் கோடுமையே. இருப்பினும் இதனுல் நமக்கோர் புதுப்போருள் கிடைக்கிறதே என்று மகிழ்தலையும் நீக்குவதற்கில்லை. சான்றுக இந்நூலினுள் ஒன்றுகாட்டி இவ்வாராய்ச்சியை முடிப்பாம்.

தோண்டைமான் இளந்திரையன் கோடைவண்மை உடைய வன். புலவர்களையும் பாணர்களையும் தாயன்போடு பாராட்டும் தகைமையினன். பாணர்களுக்கும் பரிசு தர முற்படுகின்றவன். முன்னே அவர்தம் பாசியன்ன சிதர்வை நீக்கி, 'ஆவியன்ன அவிர்நூல்கலிங்கம்' உடுக்கச் சேய்து பின்னர் உணவு உண்ணச்சேய்ய முயல்கின்றுன். வேள்ளிக்கலங்கள் விண்மீன் களைப்போல் பரப்பிவைக்கப்படுகின்றன. பாணச்சுற்றத்தை அமர்த்திவைத்து ஒருதாய் தன் பல பிள்ளைகள் ஒவ்வோருவரை யும் தனித்தனி உணவு ஊட்டுதலைப்போலத் தானே முன்னின்று அமையாத விருப்பத்தோடு ஊட்டுகின்றுன். இதனைக் கவிஞர்,

> 'மீனபூத்தன்ன வான்கலம் பரப்பி
> மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து
> ஆறுவிருப்பின் தானின்றூட்டி' (477-79)

என்று பாடுகின்றூர். இவ்விடத்தே நச்சினூர்க்கினியர் உரைப் பகுதி இவ்வருமைப்பாட்டைப் புலப்படுத்திலது. 'மங்குல் வானத்துத் திங்கள் ஏய்க்கும்' என்று பின்னே வரும் தோடரை

இதனேடு இணைத்துக் கவிஞர் கருத்தினையே மாற்றி யமைக்கிறது உரைப்பகுதி. கவிஞர் கருத்துத் தொண்டைமானிளந்திரையன் கலைவல்லாரிடம் எவ்வாறு தாயன்பைச் சொரிந்தனன் என்பதனை விளக்குவதாகவே இருத்தல் வேண்டும். 'மகமுறை மகமுறை' என்று இருகால் அடுக்கிக் கூறியது இந்த அருமைப் பாடு தோன்றுதற்கேயாம். 'தான் நின்றூட்டி' என்பது ஏவலரை ஏவிவிட்டுத் தான் வாளா இராது, தானே முன்னின்று உண்ணச் செய்தனன் என்ற அவனது கருணை மலர்ந்த நெஞ்சினைக் குறிப்பதேயாகும்.

'அளியும் தேறலும் எளியவாகலின்' என்று இவனது தண்ணளி முன் கவிஞரால் மொழியப் பெற்றுள்ளது.

'எனைத்தும்,
உணர்ச்சியில்லோர் உடைமை உள்ளோம்' என்ற புறநானூற்றுவரியால் அக்காலத்துப் பாணச்சாதியார் தன்மான உணர்ச்சி தானே பெறப்படும். ஆதலின் இளந்திரையன் தானே முன்னின்று தாயொத்த பேரன்பினுடன் உணவுண்பித்தனன் என்பதே இவ்விடத்துப் பொருந்தும் உரை யாதலைத் தெளிக. ஆனல் ஆசிரியர் நச்சினார்க்கினியர் இருந்த முறையில் எளிமையாகப் பொருள்காண முயலாது, கொண்டு கூட்டிப் புதுப்பொருள் மேவ மிகவும் இடர்ப்பட்டுள்ளனர். 'மங்குல்வானத்து மீன் பூத்தன்ன வால்கலம்; திங்கள் ஏய்க்கும் வால்கலம், மகமுறை பரப்பி, என்றும் 'தான் முகன் அமர்ந்து ஆனுவிருப்பின் மக முறை நோக்கி நின்று ஊட்டி' என்றும் கொண்டு கூட்டினர்.

"திசைகளைஉடைய ஆகாயத்திடத்தே உடுக்கள்தோன்றினாற் போன்ற சிறியவெள்ளிக் கலங்களையும், திங்களையொக்கும் பெரிய வெள்ளிக்கலங்களையும் நும்முடைய பிள்ளைகளுக்கு இடையே பரப்பி. தான் முகம்பொருந்தி அமையாத ஆசையுடனே நும்முடைய பிள்ளைகளைப் பார்த்து நின்று உண்ணப் பண்ணுவித்து"

என்று உரை எழுதினர். இதுமட்டுமோ?

'எனவே தலைவராயினார்க்குப் பொற்கலம் பரப்புவர் என்றார்' என்றும் விளக்கம் எழுதியுள்ளார். 'திங்களன்ன பொற்றாமரை என்று இணைத்துப் பொருள் கூறாமைக்கு உற்ற

One side page dark



காரணத்தையும் விளக்கியுள்ளார். 'பொற்றாமரை திங்களை யொக்கும் என்றல் பொருந்தாமையுணர்க' என்பது அவ் விளக்கம். வெண்பொன் தாமரையாயின் அது திங்களை ஒத்திருத்தல் பொருந்துவதேயன்றே? அப்படி பொருத்திக்கொண்டால்தான் மேற்கண்ட வரிகளுக்குச் சிறப்புப்பொருள் கிடைத்துவிடுமெனின் அவ்வாறு கூறியிருக்கலாம். தாம் கருதுவதேமுடிக்கும் கருத்துடையராதலின் நச்சினார்க்கினியர் கருத்து இவ்விடத்தே ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கருத்தாகாதென்பதும் உண்மைப்பொருள் ஈண்டு ஒளிக்கப்பட்டதென்பதும் உற்று நோக்குவார்க்குப் புலனும்.

தொகுப்புரை:

இதுகாறும் ஆராயப்பெற்றவற்றால் பெரும்பாணாற்றுப்படை ஒரு இலக்கிய வளம் சான்றபாடல் என்பதும், அது வரலாற்றுக்கும், பழந்தமிழர் குடும்பவாழ்வுக் குறிப்புக்கும் சிறந்தசான்று தரும் செந்தமிழ்க் கருவூலம் என்பதும், தொண்டைமானின் பண்பு நலங்களை அறியத் துணைபுரியும் என்பதும் நச்சினார்க்கினியர் நல்லுரை நல்கியுள்ளனர் என்பதும், அதனுள் போற்றத் தக்க இடங்கள் பல என்பதும் நிறுவப்பெற்றன.

---

## தனிச் செய்யுள்

பூதன்மகன் வேதனும் வேதன்மக னீசனும் புரையில் வான்சேர்
சீதன்மகன் மாரனும் மாரன்மகன் கந்தனுஞ் சிறுகாற் றேர்கோள்
நாதன்மகன் குபேரனுங் குபேரன் மகன் குறுமுனிவ னற்சேயாமா
தாதன்மகன் விநயகனுந் தருமன் மகன் விசயனுந் தரணிமீதே. 28

பரமனை யிச்சித்தோனே பதிதனி லுயர்ந்தோ னுவன்
தருமனை யிச்சித்தோனே சத்திய மகன்றே னுவன்
கருமனை யிச்சித் தோனே காமனைக் கடியா னுவன்
இருமனை யிச்சித் தோனே யியமன்வே தனைக் கடுத்தோன் 29

# ஆகமம்

(மலர் 16, இதழ் 4, பக்கம் 259 இன் தொடர்ச்சி)

வித்துவான், திரு. த. பொ. தண்டபாணி B. A. அவர்கள்,
தலைமை ஆசிரியர், ஸ்ரீ சேயராமன் பள்ளி, புதுவை.

ஒரு படத்தைப் பாருங்கள். அதனிடத்துக் காணப்படும் அழகிய சித்திர வேலைப்பாடு ஒருபக்கம். அதன் அளவும் பெயரும் மற்றோர் பக்கம். அதனைச் சார்ந்தொளிரும் ஒளியும் பார்க்கின்றவன் எவனோ அவனும் சேர்ந்து மற்றோர் பக்கம். ஆக மூன்றுவிதமாகப் பிரித்துப் பார்த்தால்தான் பொருந்துகிறது. இவ்வாறு பிரித்துப் பிரித்துப் பார்த்து வருவதால் ஒரே பொருளினிடத்தில் மூன்று பொருள்கள் தனித்தனி விளங்க இடம் பெற்றிருப்பதுந் தோன்றும். ஒவ்வொரு பிரிவின் ஆராய்ச்சியில், அப்பிரிவினையுடைய மூலம் அல்லது முதற் பொருளின் மொத்த இலக்கணத்தின் வேறாக சில பல விஷயங்கள் பேசப்படலாம். அப்போது அம்மூன்று பொருளினை ''மும்முதல்'' என்று கூறுவதும் நியாயமாகத் தோன்றும். ''மும்முதல்'' என்றே மறைகள் ஓலமிடுகின்றன.

சித்திரமும் அதனைப் பார்க்கின்றவனும், பார்க்கின்றவனின், கண் ஒளியுடன் கூடிவிளங்கும் படத்தின் பொலிவும் அழகும் ஆக எல்லாம் ஒரே படத்தில்தானே அமைந்திருக்கிறது என்பதை நாம் மறக்கக்கூடாது. அதே சமயத்தில் சித்திர வேலைப் பாட்டினைச் சிறப்பித்துக் கூறுதலாலும், பார்க்கின்றவனின் தகுதி, ஆற்றல், புகழ் முதலியவற்றைப் பாராட்டுவதாலும், படத்தின் பொலிவு, அழகு, அமைப்பு முதலியவற்றைப் போற்றுவதாலும், நாம் மேலேகொண்ட மொத்த கருத்துடன் முரண்படப் போவதில்லை. இதனை உலகப் பொதுச்சமயமும் அங்கீகரிக்கும். ஒவ்வொரு சமயத்தாரும், தத்தம் ஆதரவைத் தருவதில் தயங்கவில்லை. அப்படியிருந்தும், அம்முப்பொருளும் ஒரே ஒரு பெரும் பொருளைக் குறிக்குமே தவிர, தனித்தனியாக, ஒன்றை ஒன்று சாராமல் இருக்கும் என்று கூறுவதற்கில்லை.

ஆதலால், அம்முப்பொருளின் தனித் தன்மையானது ஏதேனும் ஒரு பொருளின் சார்பின்றி இயங்கவல்லது அன்று



என்றே கூறவேண்டும். அதற்கு மாறாக, ஒரு பெரும் பொருளினிடத்திருந்தும் பிரிந்த மூன்று பிரிவுகளையும் கண்டமாத்திரத்தில் மூன்று பொருளைக் கண்டுவிட்டதாகக் (மூன்று பிரிவினைக் கண்டோம் என்பதற்குப் பதிலாக மூன்று முழுமுதற் பொருளைக் கண்டுவிட்டோம் எனக்) கூறுவது அறியாமை நிறைந்த அகங்காரத்தின்பாற்படும் என்க.

இக் கருத்தினை ஸ்ரீ ரமணர் அடியிற்கண்ட பாட்டின் நனி விளக்குவதைக் காண்க. அதாவது :-

> '' சித்திரமும் பார்ப்பானும் சேர்படமும் ஆர் ஒளியும்
> அத்தனையுந் தானும் அவன் உலகு—கர்த்தன் உயிர்
> மும்முதலை எம்மதமும் முற்கொள்ளும் ஓர் முதலை
> மும்முதலே என்னல் அகங்காரம். '' என்க.

இது நிற்க, உலகம், உயிர், இறைவன் ஆய முப்பகுதிகளையும் 'இறைவன்'' என்ற ஒரே பொருளினிடத்தில் காணலாம். சித்திரத்தின் வேலைப்பாட்டைப் பாராட்டுவதைப் போல உலகத்தின் அமைப்பினை வியந்து ஓதலாம். சித்திரத்தைப் பார்ப்பவனின் தகுதி, அறிவு, ஆற்றல் முதலியவற்றைச் சிறப்பித்துக் கூறுவதைப்போல, உயிர்களின் தன்மை, மேன்மை, சுகாசுகநிலை ஆகியவற்றைப் போற்றி உணரலாம். பார்ப்பவனின் கண்ணொளியுடன் படத்தின் பொலிவும் அழகுந் தோய்ந்த பெற்றியினைப் பாராட்டுவதைப்போல, உலகுக்கும் உயிர்களுக்கும் ஆதாரமாய் உள்ள இறைவனை உணருந்தோறும் கிடைக்கும் பேரானுபவத்தைப்பற்றி உலகறியப் பறைசாற்றலாம்.

இவ்வாறு, ஒரே பொருளினின்றும் கிடைத்த அல்லது பிரித்து எடுத்துக்கொள்ளப்படுகின்ற மூன்று நிலைகளுக்குத் தனித்தனி பெயர்கள் உண்டு. அவற்றையும் கூற முற்படுகின்றேன். இறையருள் கிடைக்குமாக.

சித்திரத்தின் வேலைப்பாட்டினைப் பாராட்டுபவன் அத்துடன் நின்றுவிடுவானேல் அவனை என்னென்பது ? நிற்பானா ? நிற்க முடியுமா ? என்ற கேள்விகள் எல்லாம் இயற்கை வாதிகளான Darwin (டார்வின்) போன்றவர்களின் வினாக்களாகும். நமது உலக அநுபவத்தில், அமைதி அற்றவர்களையே அதிகம் பார்க்கிறோம். அறைகுறை அறிஞர்களே இப்போதைய உலக

அரங்கில் ஆடல் புரிகின்றனர். 'எனவே' அங்நிலையில் நிற்பவர்களும் உண்டு. அதைப் போலவே ஆன்மார்த்தத்திலும் "காட்சி" அளவில் ஊனக் கண்ணுக்குப் புலப்படும் இவ் வுலகைச் சதம் என்று நினைப்பவர்கள் உண்டு. அவர்கள் அதற்கப்பால், தங்களுக்குள்ளும் புறமும் நின்று தங்களைப் பணிகொளும் அல்லது தங்கள் வேலைகளை வாங்கி ஆட்டி வைக்கும் பொருள் ஒன்று உண்டென அறியார்கள். அவர்கள் தோன்றுதோட்டு நிலவும் உண்மைக்கு முற்றிலும் மாறுபடுவர்.

அத்தகையோரை நமது "சைவசித்தாந்தம்" என்ற பெரு நூல் "பாச அறிவினர்" என்ற பெயரால் அழைக்கின்றது.

இரண்டாவதாக, சித்திரத்தைப் பார்க்கிறவர்களின் தகுதி, ஆற்றல், அறிவு முதலியவற்றைப் போற்றுவதோடு மட்டும் தங்கள் வேலையை முடித்துக்கோள்பவர்களும் உண்டு. அவ்வாறே, இப் பரந்த உலகின்கண் தோன்றி நின்று மறையும் உயிர்களின் மேன்மை முதலிய குணங்களைக் கண்ணியமாகக் கூறுங்தோழிலுடன் தங்கள் திருப்பணி முடிந்ததாகக் கருதும் அன்பர்களும் உண்டு என்க அவர்கள் தங்கள் உயிருக்குற்ற "மரண கதியை" நீக்கியாளும் இறைவன் ஒருவன் தங்களுக்கு மேல் உண்டு என்று உணரமாட்டார்கள் அப்படிப்பட்டவர்களைத் "தன்மை அறியாத பசுக்கள்" என்று பெயரிட்டு நமக்கெல்லாம் பொதுமறையாகத் திகழும் சைவசித்தாந்தம் என்ற சாத்திரம் அழைக்கின்றது.

மூன்றுவதாகப் பார்ப்பவனின் கண் ஒளியும் படத்தின் பொலிவும் அழகும் ஒன்றுய்க்கூடி ஒளிரும் நிலையினை மட்டும் மேம்படுத்திக் கூறுவதோடு தங்கள் வேலை முடிகிறதென்பாரும் உண்டு. அவ்வாறே "இறைவன்" ஒருவனே எல்லாவற்றை யும் செய்கிறுன் என்ற முடிவுக்கு வருபவர்களும் உண்டு. அவர்களை வேதாந்த நூல்கள் சைவ நூல்கள் "அத்துவிதி" என்றும் "பதி" என்றும் பெயரிட்டு அழைக்கின்றன. எனவே பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்கள் தோன்றின. அவற்றை எல்லாரும் ஒத்துக்கோள்கின்றனர். ஆனுல் அம்முப்பொருள் களின் மெய்ப்பாட்டினை ஓர்ந்துணரவேண்டும்.



அடியேன் இவண்கூற முயன்ற கருத்தினை "ஆன்ம சாட்சாத்கார பிரகடனம்" என்ற நூலின் பதினேழாம் செய்யுள் கூறுவதைக் கேட்போமாக. அதாவது :-

"தன்மெய் அறியாதவனே சிருட்டி முதல்
தன்மம் உறு பசு தானுவான்—தன்மெய்
எவன்அறிவன்; என்றும் இருப்பன்; விசுத்தன்;
இவன் அவனே; ஐயமிலை தேர்வாய்" என்பதாம்.

எனவே, ஆகமத்தின் இரண்டாவது பொருளை இங்கே காணும்பொழுது நம்மை ஆட்டிவைக்கும் நல்லறிவே தலைப்படு மாக. அதன்படி ஆகமம் என்ற சொல்லின் பொருளைப் பார்ப்போமாக :

ஆ= பாசம் = உலகம் = பந்தங்கள் சேர்ந்தது.

க = பசு = உயிர்கள் = பந்தக்கட்டுடையது மட்டுமின்றி எல்லாவகை உயிர்த்திரளும் சேர்ந்தது.

மம்= பதி = இறைவன்.

இவ்வாறு சகலாகம பண்டிதர்கள் சகஸ்ரநாமாவளிக்குப் பொருள் கூறியபோது சொல்லியிருக்கின்றனர். சொல்லியும் வருகின்றனர். நான் நேரில் திருவருணையில் பெரும் புலவர் களோடு சம்பாஷித்தபோது கேட்டிருக்கிறேன். அதனையே இங்கே கொடுத்திருக்கிறேன்.

எனவே, ஆகமம் என்ற சொல்லுக்கு மூன்றுவித பொருள்கள் வெவ்வேறு நிலைகளில் கிடைத்திருக்கின்றன. உயிர்களும் உலகமும் தோன்றுதற்கு முன்னும் பின்னும் இருந்துவரும் நிலை பேருன தேய்வம் — ஒன்று.

உலகந் தோன்றுவதற்கு முந்தியே தோன்றிய உயிர்கள் — இரண்டு.

உயிர்களின் தேவைக்கு வேண்டியவற்றை வழங்க எழுந்த உலகம் — மூன்று.

ஆக, பதி+பசு+பாசம் என்று சோல்லப்படும் இறை+உயிர்+உலகம் என்ற முப்பிரிவினைத் திறம்பட அறிவிப்பது தான், ஆகமம் ஆகும் என்பதை நன்கு உணரலாஞேம்.

உலகம் உயிரில் அடங்கும். எப்படி? உலகம் அறிவற்றது. உயிர் சிற்றறிவுடையது. அறிவுடைய ஒன்றில் அறிவற்ற மற்ரேன்று அடங்கும் என்ருல் தர்க்கரீதியில் ஒத்துக்கோள்வதற் கில்லை என்பாரும் உண்டு. நான் கூற முற்பட்டது அதுவன்று. உயிர் இருந்தால்தான் "உலகம்" என்ற மண்ணில் வாழும் வாழ்வினைச் சிறப்பிக்க முடியும். உயிருள்ள போருள்கள் அனைத்தும் அறிவற்ற இக் குவலய பீடத்தைச் சிறப்பிக்கா தேன்க. தத்துவந் தேரிந்த தபோதனர்கள் அதாவது இறைவன் அருள்வழி நின்ற பேரியோர்களால்தான் இவ்வுலகம் சிறப்புறும் என்பது நமது கோள்கை. உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டல்லவா ? ஆதலின் உலகம் உயிரில் அடங்கும் என்றேன்.

உயிர்கள் இறைவனிடம் ஒடுங்கும். எப்படி ? தோன்றி நின்று அழியும் பாசத்தோடர்புடைய உயிர்க்குற்ற பிறப் பிறப் போழிக்கும் மெய்யறிவு இறைவன் திருவருளால் உயிர்களுக்குக் கிடைப்பதால், எனைத்தானும் ஐம்புலநுகர்வான் மேன்மையுறும் உயிர்கள் தங்களின் மரணமிலாப் பெருவாழ்விற்கு இறைவன் மாட்டுச் செல்லவேண்டி யிருக்கிறது. அவை இறைவன் அன்றித் தாமே இயங்கவல்லவை அல்ல ஆதலின் உயிர்கள் இறைவனிடத்தில் அடங்கும் என்றேன். இறைவன் நித்தியன், நிமலன், அழியாதவன்.

உலகம் உயிரை உண்டுபண்ண முடியாது. உயிர் இறைவனை உண்டுபண்ண முடியாது. மகன் தந்தையை உண்டு பண்ண முடியாது. ஆனுல் தந்தையாக ஆகலாம். அதைப் போல், உயிரும் இறைவனுக ஆகலாம். இறைவனை உண்டு பண்ண முடியாது. இவ்வுண்மையை நிதானமாகவும், உறுதி யாகவும் அநுபவத்தால் உணரவேண்டியிருக்கிறது.

இறைவன் ஏகன். மோனசுகி. தேன்திசை மூர்த்தி ஆகிய நிலைகளில்தான் தனித்திருக்கிருன். பிறகு தனது இருபபை அல்லது தன்னையே மக்கள் உணரவேண்டும் என்று நினைத்த அளவில் உலகம் தோன்றுகின்றனர் மக்களின் நலன்கள்



குறையாதிருக்கக் கருதி உலகத்தையும் தோற்றுவிக்கிருன். இவற்ருல் பதி+பசு+பாசம் என ஆகமம் கூறுகின்ற முப் போருளும் உண்மை தேளிவாம்.

பாசத்தில் இடுவது அருள். பாச வேரினை அறுப்பதும் அப் பழம்போருளே. உலகங்கள் எல்லாவற்றையும் ஆள்வ தும் அவ்வருளே. உயிர்களின் மும்மலங்களையும், காரியங் களையும் அகற்றுவது அருளே. பல துளைகள் நிறைந்த குடத்தி னுள் வைத்த விளக்கின் ஒளிக்கிரணங்கள் எப்படி அத்துளை களின் வாயிலாக வெளியே பாய்ந்து பிரகாசிக்கிறதோ அவ் வாறே நமது அகத்துள் உறைகின்ற அருளின் அல்லது ஆண்டவனின் அருட்கதிர்கள் நமது அந்தக்கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆய நான்கின் வழியாகவும், ஞானேந்திரியம்+கர்மேந்திரியங்களின் வாயிலாகவும் பீறிட்டு வெளிப்போந்து தனது வான்கருணையை வாரி வழங்கிக் கோண்டே இருக்கிறது. (தோடரும்)

---

"குமரகுருபரன்"

திங்கள் வெளியீடு

ஆண்டுச் சந்தா ரூ. 1—8—0

விலாசம் :— நிர்வாக ஆசிரியர், உயர்திருவாளர். T. M. குமரகுருபரன் பிள்ளை B.A., B.L. அவர்கள், "குமரகுருபரன்" ஆபீஸ், ஸ்ரீ வைகுண்டம். இவ் வெளியீடு ஏழாண்டுகளாகத் தோண்டு புரிகின்றது. சமயம் இலக்கியம், அறம் முதலிய வற்றினை எளிய நடையில் தேளியக்கோண்டு உலவுகின்றது. தருமையாதீனத்து முனிபுங்கவரும், ஸ்ரீ காசி மடத்து முதல்வரு மான ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருப்பெயரோடு வெளிவரு வதால் அவர்கள் அருளிய நூல்களின் ஆராய்ச்சி விளக்கமும் ஏற்றுத் திகழ்கிறது. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் ஆணையின்வண்ணம் "குமரகுருபரன்" இதழ் வெளிவருகிறது. எல்லோரும் பாராட்டிவரும் சிறப்புடையது. அன்பர்கள் பலரும் வாங்கிப் பயன் அடைக.

—ஆசிரியர்.

# முப்பொருள் ஆராய்ச்சி

## சித்தாந்தம் (1919. மே - சேப்.) தொகுதி 8. பகுதி5 - 9.

ஜலத்தைப் பானம் பண்ணினபேர்க்குத் தாகந் தணிந்தது போல் ஆசாரியர் சரித்திரத்தைப் படித்து ஏற்றக்குறைவான வசனங்களைத்தள்ளி உண்மை வசனங்களை யறிந்து போதித்தாற் பக்குவான்மாக்களுக்கு ஞானமுண்டாம். சுருதி - குரு சுவாநுபவ ஆ. 3. இதிற்சுருதி முதன்மையோ குருவாக்கு முதன்மையோ வேனில் சுருதியிலே பொய்யாகவு மெய்யாகவுஞ் சொல்லி யிருக்கையாலே சுருதிக்கு முதன்மைகூடாது. இனி குருவானவர் கிரியைத் தொழிலில் நிற்கிறவனைச் சரியைத் தொழிலிலே நிருத்தப்படாமையாற் குருவுக்கு முதன்மை கூடாது. ஆகை யினுற் சுவாநுபவமே முதன்மை. இந்தச் சுவாநுபவத்திற்குச் சுருதியுங் குருவாக்குங் கருவியாகிய சகாயமென்றறிக. வியாபகம், வியாப்பியம், வியாத்தி. இதில் வியாபகம் கடல் போல. வியாப்பியமதில்நின்ற சலம்போல. வியாத்தியுப்பும் நீருங் கலந்து நின்றதுபோலவாம். இச்சிவன் வியாபகம், அதனுள் ஆன்மா வியாப்பியம், மலமும் ஆன்மாவுங் கலந்து நிற்றல் வியாத்தி. இனியான்மாவுக்கு வியாதியாவது ஆணவமலமேயாம். மருந்தாவது தீட்டையேயாம். பத்தியமாவதற்கேற்ற வனுட்டிப்பே யாம். பரிகாரி ஞானுசாரியரேயாம்.

ஆன்மா தனித்திராது. ஆகாசமும் படிகமும் ஒருகாலும் தனித்திராமல் கண்போல இருளோடும் ஒளியோடுங் கூடிக் கொண்டிருக்கும். ஆன்மா சுதந்திரவீனன் கிஞ்சிக்கினன். சுதந்தரமுடையவனென்ப தெங்கனமெனில் ஆன்மா தனியே யொன்றையு மறியாமையாலுந் தனியே தனுகரணபுவன போகங் களை யுண்டாக்கிக் கொள்ளாமையினுலும் சுதந்தரவீனனும். வினைகளை யீட்டிக்கொண்டமையால் யான்மா சுதந்தரமுடைய வனும். இதற்குச் சிவனறிவித்ததெல்லாம் அரிய மாட்டாதபடி யினுலே ஆன்மா கிஞ்சிக்கினனேயாம். ஆதித்தன் வியாபகமாய் எண்ணிறந்த கண்களுக்குங் காட்டிக்கொண்டு நிற்கிறதுபோல சகல அண்டங்களிலேயும் சகல புவனங்களிலேயு மிருக்கிற எண்ணிறந்த வான்மாக்களுக்கு மறிவுந் தொழிலுமுண்டா யிருக்கையினுலே சிவன் சருவ வியாபகனேயாம். இனி இருளா னது எண்ணிறந்த கண்களையும் பதார்த்தங்களையுந் தெரிய



வொட்டாமல் மறைத்ததுபோல எண்ணிறந்த ஆன்மாக்களையுஞ் சிவனையறிய வொட்டாமல் மலம் மறைத்துக்கொண்டிருக்கை யினுலே ஆணவ மலமும் வியாபகமே. அந்தந்த வூரிலே யிருக்கிற பெயர்களுக்கு (ஒரு ஊரிற்றுனியம் ஒரு வூரிலேயே) அந்தந்த வூரிலே யிருக்கிற பல தானியங்களும் போசிப்பாய் விடுகிறதுபோல சகல அண்டங்களிலேயுஞ் சகல புவனங் களிலேயுமிருக்கிறவுயிர்களுக்கெல்லாம் அங்கங்கே சுகதுக்கங்க ளிருக்கிறபடியினுலே கன்ம மலமும் வியாபகமேயாம்.

இனி, குயவன் அந்தந்த வூரிலே யிருக்கிற உயிர்களுக் கெல்லாம் பாண்டங்களை வனைந்துகொடுத்தல்போல எண்ணிறந்த அண்டங்களிலேயும் எண்ணிறந்த புவனங்களிலேயும் இருக்கிற வுயிர்களுக்குத் தனுக்கள் தனித்தனியே யுண்டாயிருக்கையால் மாயை வியாபகமேயாம். இனிக் கண்ணனது ஆதித்திய மண்டலஞ் சந்திரமண்டல மற்றுமுண்டாகிய கிரகங்களினுடைய மண்டலபரியந்தம் விபாகமாயிருந்து காண்கிறதுபோலச் சகல வண்டங்களிலேயுஞ் சகல புவனங்களிலேயும் வியாபகமாய் போக்குவரவில்லாமலிருந்து அறிகையினுலே ஆன்மாவும் வியாபகமேயாம். பிள்ளைக்குப் பயித்தியம் பிடித்தால் அப் பிதாவானவன் அந்தப் பயித்தியத்தைத் தீர்க்கவேண்டுமென்று அவனுக்கு ஆசையாகிய நோய்பிடித்தால்போல ஆன்மாவுக்கு ஆணவமாகிய நோயாலே சரீரம் வந்தமையாலே அந்தமல நோயைத் தீர்க்கவேண்டுமென்று சிவனுக்கு ஆசையாகிய நோய் பிடித்தமையாலே அவருக்குந் திருமேனியுண்டாயிற்றென்றறிக. ஆணவ மலத்திலே யிருக்கிற ஆன்மா சிவனை வெறுத்துக் கொண்டே யிருக்கும். அதெப்படியெனில், பித்தம் பொருந்தின நாவுக்குப் பால் கசந்தாற்போலவேயாம். இனி ஆணவ மலம் தீர்ந்த ஆன்மா சிவனை விரும்பிக்கொண்டேயிருக்கும். அதெப்படி போல வென்னில் பித்தந்தீர்ந்த நாவுக்குப் பால் இனித்தாற் போலேயாம். ஆன்மாவானவன் ஆணவ மலமாகிய வூரிலே யிருந்து (814) லட்சம் யோனி பேதங்களாகிய மார்க்கத்தில் சென்று புண்ணிய பாவங்களினுலுண்டாகிய சுகதுக்கமாகிய கட்டமுதைப் புசித்து சிவஞானமாகிய வூரிலே சென்றிளைப்பாறிச் சிவாநுபவமாகிய புசிப்பைப் புசித்துக்கொண்டு சுகமாயிருப்பன். அதுயெப்படியெனில், ஒருவன் வூரிலேயிருந்துப் புறப்பட்டு அங்கங்கே தங்கி காசிக்குப்போய் கங்கையிலே தீர்த்தமாடிச் சுகமாயிருந்தது போலவேயாம். சிவன் பேத்தான்மாக்க

ளிடத்திலே பாலுக்குள் நெய்போலத் தோன்ருமல் நிற்பன். முத்தான்மாக்களிடத்தில் தயிருக்குள் நெய்போல வெளிப்பட்டு நிற்பன். வேத சிவாகமங்களினுடைய சத்தங்களெல்லாம் பால்போலவே யிருக்கும். அதினுடைய அர்த்தங்களெல்லாம் நெய்போலவே யிருக்கும்.

இனி பக்குவ ஆன்மாவானவன் தன்னுடைய அறிவாகிய மத்தியிலே அந்தப் பாலைக் கடைந்து அந்த நெய்யாகிய அர்த்தங்களை யெடுத்தனுபவிப்பவன். பஞ்சகிருத்தியம் நித்தியமோ அநித்தியமோவெனில், சித்தியார் '' உயிர்கட்கெல்லாம் விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன் '' என்ற திருவிருத்தத்தால் பஞ்சகிருத்தியம் நித்தியமேயாம். ஆன்மாக்களெடுத்த சரீரத்துக்குண்டான கன்மங்கள் போசியாமல் ஒருகாலு மொழியா. இவனல்லாது கன்மம் ஒருகாலும் வராது. ஆகையினுலே ஒருவருக்குந் துறவுகூடாது. நூல்களிலே துறவு சொல்லியிருக்கிறதற்கு அர்த்த மேப்படியெனில் யெல்லாப் பதார்த்தங்களிலேயுந் தான் கூடியிருக்கையிலுந் தன்னுடைய வறிவு அந்தப் பதார்த்தத்திலே வுபாதியாயிருக்கிறதே துறவென்றறிக. பிரளயாகலருக்குச் சரீரமில்லாமையால் அவருக்கு ஆணவ மலம் தீரமாட்டாது. இனி இரண்டிற்கும் போக்கேப்படியெனில் பிரளயாகலருக்குச் சரீரம் இல்லையென்றது சகலருடைய சரீரம்போல மயக்குதலில்லாதபடியினுலேயாம். அவர்களுக்குச் சரீரம் நேர்மையாகவே யிருக்குமென்றறிக. விஞ்ஞானகலருக்குக் கன்மமும் மாயையுமில்லை யென்றது அவ்விரண்டினுலு மயங்குதலில்லாமையாலே அவர்களுக்குச் சுத்தமாயையிலே நேர்மையான சரீரமுங் கன்மமுமுண்டேன்றறிக. இப்படி யில்லாவிட்டால் இவ்விரண்டு பேயர்களுக்கும் ஆணவ மலம் நீங்கமாட்டாது. சிவன் பஞ்சகிருத்திய மொருகாலும் பண்ணுகிறதில்லை. சிவ சத்தியே பஞ்சகிருத்தியம் பண்ணும். அதுவேப்படிவெனில் ஆதித்தியனுக்குக் கிருத்தியமில்லாமல் ஆதித்த கிரணத்திற்கு கிருத்தியமுண்டானதுபோல வேன்றறிக. பாசஞானத்திற்குத் தோழில் ஆணவமல நீங்குமளவுண்டு. பசுஞானத்திற்குத் தோழில் நின்மல துரியமளவுண்டு.

சிவஞானத்திற்குத் தோழில் நின்மல துரியாதீத மளவுமுண்டேனவறிக. அஞ்ஞானியானவன் பாவத்தை வேசியைப் போலவும் புண்ணியத்தைக் கற்புடைய ஸ்திரீயைப் போலவும் நினைப்பன். இனி ஆணவமல நீங்கின ஆன்மாவானவன்



புண்ணியத்தையும் பாவத்தைப்போலப் பொல்லாததேனவறிந்து அந்த விரண்டையு நீங்கிநிற்பன். அதேப்படிபோலேனில் அது அத் துறவியானவன் கற்புடைய ஸ்திரீயையும் அருவேறுத்து வேசியைப்போல விட்டுவிடவேன்றறிக. சருவான்மாக்களுக்கும் மோட்சத்திலே சிவானுபவம் ஒருப்படித்தல்லாமல் பல பல பேதமாகவே யிருக்கும். அதேப்படிபோலவேனில் சமுத்திரத்திற் குள்ளே நாழியுழக்கு மரக்கால் இவைகளை யமுக்கி முகக்க அவ்வவ்வளவே மொண்டு பேதமாய் நின்றதுபோலவேன்றறிக. '' தோண்டர் முகந்து துறையறியோமே யேன்ருர் '' திருமூலர். பேத்தான்மாக்களுக்குத் தேகமே யான்மா போகமே மோக்ஷ மேன்றறிக. சிவமும் சத்தியு மொன்றுபட்டு நிற்கிறதேப்படி யேனில் மரமும் வயிரமும்போலவும் ஆதித்தனும் கிரணமும் போலவுமாம். ஒருவன் பயிரிட்டு ஆயிரங்கோட்டை நேல்லு கண்டபின்பு களஞ்சியத்திலே ஐந்நூறு கோட்டை கட்டி, முந்நூறு கோட்டை உணவுக்குக் கட்டி, யிருநூறு கோட்டை விதைத்து யிருக்கையில் களஞ்சியத்திடை வைத்தது தீப் பற்றியது. உண்ணவைத்தது உண்டு கழிந்தது. விதைத்தது தீய்ந்தது இவ்வாறுபோல ஆன்மாவுக்குப் பக்குவம் வந்த காலத்திலே சஞ்சித கன்மமேல்லாம் ஞானசாரியர் திருநோக்கால் வேந்துபோயிற்று. பிரார்த்த கன்மம் எடுத்த சரீரத்திற் போசித்துத் தோலைந்தது. ஆகாமிய கன்மம் சிவஞானத்திலே மேலைக்கு வாராமல் நீங்கிப்போயிற்று. இங்ஙனம் சஞ்சிதமும் பிரார்த்தமும் ஆகாமியமும் நீங்கின முறையறிக. ஆன்மாக்களைத் தோகை பண்ணப்படாது. பிறப்பு இறப்பில்லை. நித்தியமா யிருக்கும். உயிர் ஆணவ மலத்துடன் கூடியே யிருக்கும். எப்படியேனில், அரிசிக்குத் தவிடுபோலவும் சேம்புக்குக் களிம்பு போலவும் கடல்நீருக்கு உப்புபோலவுமாம். ஆணவ மலம் உயிரை மயக்குவதேங்கனமேனின் குழந்தைப் பருவம் உயிரை மயக்குவது போலவும் பயித்தியமுயிரை மயக்குகிறது போலவும், கள், உண்டவனை மயக்குவது போலவும் ஆம். உயிரை ஆணவ மலம் மயக்குவதால் வுயிருக்கு நல்வினை தீவினைகளிலே யாசை வரும். அதேப்படியேனில் பசி உணவில் ஆசையை யுண்டாக்குவது போலவும் குருடு கோலிலே யாசை யுண்டாக்குவது போலவும் பிணி மருந்திலே யாசை யுண்டாக்குவது போலவும் ஆம். உயிருக்கு ஆணவமலங்கோடுத்த ஆசையைச் சிவ பெருமானுணர்ந்து உயிர்க்குத் தனுகரண புவனபோகங்களை

யிடைவிடாமல் மாற்றிக் கொடுத்துக் கொண்டே யிருப்பர். அதெப்படியெனில் வியாதியினாலே மருந்திலே யாசைப்பட்ட போது பண்டிதனறிந்து மருந்து கொடுப்பதுபோல வென்றறிக. இது உயிருக்கு அநாதியிலுள்ள செய்தி. எல்லா வுயிர்களுக்கு மிச்சையு மறிவுந்தொழிலும் எக்காலமு மிடைவிடாமலே யிருக்கும். ஆணவ மலத்துடன் மாத்திரங் கூடியிருக்கிற வுயிர்களுக்கெல்லாம் விஞ்ஞானகலரென்று பெயர். ஆணவ மலத்துடனேயுங் கன்ம மலத்துடனேயுங் கூடியிருக்கிற வுயிர் களுக்கு எல்லாம் பிரளயாகலரென்று பெயர். ஆணவ மலத்துட னேயுங் கன்ம மலத்துடனேயும் மாயை மலத்துடனேயுங் கூடி யிருக்கில் வுயிர்களுக்கெல்லாஞ் சகலரென்று பெயர். ஆக வுயிரிலக்கண முற்றும்.

ஆணவமல மொன்றுயிருந்து எல்லா வுயிர்களுக்கும் நல்ல நினைவுகளை மறப்பிக்கும். பொல்லாத நினைவுகளை நினைவிக்கும். நல்ல சொற்களைச் சொல்லவொட்டாது. பொல்லாத சொற்களைச் சொல்லுவிக்கும். நல்ல தொழில்களைச்செய்ய செய்யவொட்டாது. பொல்லாத தொழில்களைச் செய்வித்துக்கொண்டே யிருக்கும். உயிர்க்குப் பிரயோசனமாயுள்ள காரியங்களை ஒரு காலத்துஞ் செய்யவொட்டாது. உயிர்க்குக் கெடுதிவருகிற காரியங்களை யெந்தக்காலமு மிடைவிடாமல் செய்வித்துக்கொண்டேயிருக்கும். உயிரினுடைய நல்லறிவை யெந்தக்காலமும் இடைவிடாமல் கெடுத்துக் கொண்டே யிருக்கும். உயிருக்குப் பொல்லாத வறிவை யெந்தக்காலமு மிடைவிடாமல் கொடுத்துக்கொண்டே யிருக்கும் ஆணவ மலம் முற்றும்.

### கன்மம்

கன்மம், நல்வினை, தீவினை ஆ 2. மனம், வாக்கு, காயம், பசு, பதி, புத்திபூர்வ நல்வினை யிப்படி யின்னம் பலவிதமுண்டு. தீவினையுமிவ்வாறும். நல்வினைகளுக்குப் பசுபுண்ணியமென்றும், பதிபுண்ணியமென்று மிரண்டு பலன் வரும். தீவினைகளுக்குப் பசுத்துரோகமென்றும், பதித்துரோகமென்று மிரண்டு பலன் வரும்.

இனிப் புண்ணியங்களுக்குப் பலன் இன்பமே வரும். பாபங் களுக்குப் பலன் துன்பமே வரும். வினைகளுக்கெல்லாஞ்



தூலகன்மமென்று பெயர். இந்த வினைகளுக்குப் பிறகு பலனாக வருகிற புண்ணிய பாவங்களுக்கெல்லாம் சூட்சமகன்மமென்று பெயர். இந்தப் புண்ணிய பாவங்களுக்குப் பிறகு பலனாக வருகிற இன்பத் துன்பங்கட்கு அதிசூட்சம கன்மமென்று பெயர். இருவினைகளுக்கும் ஆகாமியமென்றுபெயர். இருவினைப்பலனாகிய புண்ணிய பாவங்களுக்குச் சஞ்சிதமென்று பெயர். புண்ணிய பாவங்களுக்குப் பலனாகிய இன்பத் துன்பங்களுக்குப் பிரார்த்த மென்று பெயர். பயிரிடுகிறதுபோல இருவினைகள். பயிர்ப் பலனைக் களஞ்சியத்திலே கட்டிவைக்கிறதுபோலப் புண்ணிய பாவங்கள். கட்டிவைத்ததில் சிறுகச்சிறுக எடுத்துண்கிறது போல இன்பத்துன்பங்களை யனுபவிக்கிறது. இன்பத்துன்பங்கள் தெய்விகத்தினாலேயும் வரும். பிற வுயிர்களினாலும் வரும். பஞ்சபூதங்களினாலும் வரும். ஆகமூன்றுந் தானிச்சைப்பட்டு வருகிறதுமுண்டு. தானிச்சைப்படாமல் வருகிறதுமுண்டு. இச்சையானபடி வராமல் வேறொன்று வருகிறதுமுண்டு.

ஆ 3. கன்ம இலக்கணமுற்றும்.

### சுத்தமாயையிற் றோற்றம்

சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆ 5 தத்துவமும், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆ வாக்குள் நாலும் ஐம்பத்தோரு அட்சரமும், எண்பத்தோரு பதமும், ஏழுகோடி மகாமந்திரமும், இருபத்தெட்டு மூலாகமங் களும் இருநூற்றெ ழுபாகமங்களும் நாலு வேதங்களும் பதினெட்டுப் புராணங்களும் ஆறு சாத்திரங்களும் அறுபத்துநாலு கலைஞானங்களும், சிவபேதங்களுக்கும் சத்திபேதங்களுக்கும் நாதவிந்து சதாசிவ மகேசுர ருத்திரபேதங்களுக்கும் விஞ்ஞான கலர் பிரளயாகலருக்கும் சரியை கிரியை யோகமுடையவர்களுக் கும் தனுகரண புவனபோகங்களும் நிவர்த்திகலை பிரதிட்டாகலை வித்தியாகலை சாந்திகலை சாந்தியதீதகலை ஆ 5. இப்படிப்போல இன்னமனந்தங் காரியங்களும் சுத்தமாயையிலே யிருந்து பிறக்கும். அதுவெப்படிப் போலவெனில் ஒரு பொற்கட்டியில் பலபல ஆபரணமும் ஒரு இரும்புக்கட்டியில் பலபல வாயுதங் களும் மண்ணிலே பலபல பாண்டங்கள் பிறக்கிறதுபோலவுமா மென்றறிக. சுத்த மாயையிற் றோற்றமுற்றும். (தொடரும்)

# ஊழ்

வித்துவான், நெல்லை. திரு. ம. சிவசம்பு அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

(மலர் 16, இதழ் 4, பக்கம் 302 இன் தொடர்ச்சி)

### மக்கட்பேறு தருவது ஊழே !

நல்ல மனைவி கிடைத்தால்மட்டும் வாழ்க்கை இன்பமாக அமைந்துவிடுவதில்லை. நல்ல மக்கட்பேறும் வேண்டும். நல்ல குழந்தைகள் பிறந்தால்தான் குடும்பம் சிறப்பாக இருக்கும். கணவன் மனைவி கருத்து ஒருமித்து வாழ்ந்தாலும் தீய குழந்தைகள் பிறந்துவிட்டால் துன்பப்படுவதைப் பார்க்கிறோம். குழந்தைகள் பிறப்பதற்கும் இவன் செய்த வினைதான் காரண மாகிறது. நல்ல மனம் உடையவர்களுக்குத்தான் நல்ல குழந்தைகள் பிறக்கும் நல்ல மனம் உடையவர்கள் நல்ல வினைதான் செய்வார்கள். நல்ல வினையால் நல்ல குழந்தைகளே பிறக்கும். தீய வினையால் தீய குணமுடைய குழந்தைதளே பிறக் கும். ஒருவர் நல்லவரா கெட்டவரா என்பதை அறிதற்கு அவர்கள் குழந்தைகளே சான்ருக அமைகின்றன. நல்ல பண்பு, அறிவு, ஒழுக்கம் உள்ளவர்களுக்கு நல்ல குழந்தைகளே பிறக்கின்றன. சிலருக்கு இதற்கு விரோதமாகக் குழந்தைகள் பிறந்திருப்பதை யும்பார்க்கிறோம். பெற்றோர்கள் எவ்வளவு நல்லவர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்கா இப்படிப்பட்ட கெட்ட குழந்தைகள் பிறந்திருக்கின்றன என்று பேசுகிறோம். அதுதான் தவறு. அவர்கள் நல்லவர்கள் அல்ல. உலகியல் தெரிந்து நல்ல முறையில் நடிக்கிறார்கள். அவ்வளவுதான். உண்மையில் தீயவர்களே. இப்பொழுது தீவினை செய்யாவிட்டாலும் கொஞ்ச காலத்திற்கு முன் தீவினை செய்திருக்கவேண்டும். தீவினை செய்த நேரத்திலே இவன் அனுபவிக்கின்ற இன்பமும் தீமை உள்ள தாகத்தான் இருக்கும். அப்பொழுது பிறக்கின்ற குழந்தை தீய செயல் உள்ளதாகத்தான் இருக்கும். ஒரே குடும்பத்தில் சில குழந்தைகள் நல்லவர்களாகவும் அறிவுள்ளவர்களாகவும், சில குழந்தைகள் கெட்டவராகவும் அறிவற்றவராகவும் இருப்பதைக் கொண்டு இக் கருத்தை ஒருவாறு தெரியலாம். நல்ல பண்பு



களோடு இருக்கின்றபொழுது நல்வினை செய்து நல்ல கருவை அமைக்கிறான். தீவினை செய்கின்றபொழுது தீவினைப் பலன் உள்ள கருவை அமைக்கிறான். அதிகத் தீவினை செய்தவர் களுக்கு மக்கட்பேறே இல்லாது போய்விடுகிறது. அதைப் போக்கவல்லது இறைவழிபாடு ஒன்றே. இக்கருத்தைப்பற்றி பின்னர் பார்ப்போம். நம் நாட்டில் குழந்தைகளைச் செல்வங் களாக மதிப்பிடுவதுண்டு. அறிவுடையவர்கள் தம் மக்களைத் தன்னுடைய பொருளாகவே குறிப்பார்கள். இக் குழந்தைச் செல்வங்களும் தன்னுடைய வினையால் தான்வந்ததாக எண்ணு வார்கள். இக் கருத்தை வள்ளுவர் வாக்கால் உணரலாம்.

> " தம் பொருள் என்பதம் மக்கள் அவர் பொருள்
> தம் தம் வினையான் வரும். " (குறள் 63)

### பிறப்பைக் கொடுப்பதும் ஊழே !

பிறப்பு எடுப்பதற்குக் காரணமாக இருப்பது உயிராகும். உயிர் கூட்டங்கள் பல. உயிர்கள் எல்லாவற்றிற்கும் பிறப்பு உண்டு என்பதைப் ' பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் ' என்ப தனுல் அறியலாம். ஓர் உயிர் அது செய்துகொண்ட வினைக்குத் தக்கவாறு பலவகையான பிறப்புக்களில் பிறக்கிறது. உயிர்கள் பிறந்து பலவகையான உடம்புகளைத் தாங்குவது அது செய்த நல்வினை தீவினைக்கு ஏற்ப அமையும். அந்த இருவினைகளைச் செய்வதற்குக் காரணமாக இருப்பது உயிர்க்கு இயல்பாக இருக்கும் இருள் தன்மையே. இதை ஆணவ இருள் என்பார்கள். இருவினையும் ஆணவ இருளில் இருந்துதான் உண்டாகிறது. உயிர் நல்லவினை செய்தால் நல்லபிறப்புக் கிடைக்கும். தீயவினை செய்தால் தீயபிறப்புக் கிடைக்கும். பிறவிக்கு வினைதான் காரணம் என்பதை ' வினைப்பிறவி யென்கின்ற வேதனையில் அகப்பட்டு ' என்ற மாணிக்கவாசகர் திருவாக்கு உணர்த்தும். ஒருவன் போன பிறப்பில் தீவினை செய்தவனு நல்வினை செய்தவனு என்பதை இப்பிறப்பால் அறியலாம். இப்பிறப்பில் அவன் செய்கின்ற வினைகளை வைத்துத்தான் மறு பிறப்பு அமையும்.

> " இறந்த பிறப்பிற்ருஞ் செய்த வினையைப்
> பிறந்த பிறப்பால் அறிக—பிறந்திருந்து
> செய்யும் வினையால் அறிக இனிப்பிறந்
> தெய்தும் வினையின் பயன். " (அறநெறிச்சாரம்)

### பதவி தருவது ஊழே !

இதைப் பழமொழிப்பாடல் நன்குவிளக்கும். சோழ நாட்டின் கண் உள்ள காழிப்பதியில் ஆட்சிசெய்த அரசன் இறந்துபடவே, அவன் வழியில் யாரும் அவ்வரசாட்சியை ஏற்கஇன்மையால் அமைச்சர்கள் பட்டத்து யானை யாரைக் கொண்டுவருகிறதோ அவருக்கே அரசபதவி என்று உறுதி செய்தனர். யானையை ஏவிவிட்டனர். அவ்யானை கருவூரிலிருந்த கரிகாலனைக் கொண்டு வந்து முடிசூட்டுமாறு செய்தது. கரிகாலன் இதைத் தெரியாது இருப்பினும் ஊழ்வினை அவனை அரசனுக்கியது.

" கழு மலத்தில் யாத்தகளிறும் கருவூர்
விழுமியோன் மேற் சென்றதனால்—விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது. " (பழமொழி 62)

### இன்ப துன்பம் தருவது ஊழே !

ஒவ்வோரு உயிரும் ஒரு பிறவியில் இன்பமும் மற்றொரு பிறவியில் துன்பமும் அனுபவிக்கிறது என்று கூறுகிறார்கள் சிலர். எல்லாம் ஒரே பிறவியில்தான் அனுபவிக்கிறது என்கிறார்கள் வேறு சிலர். உலகியலை நோக்கினால் உயிர் ஒரு பிறவியில் இன்பமும் ஒரு பிறவியில் துன்பமும் அனுபவிப்ப தில்லை. துன்பமும் இன்பமும் தனித்தனி வகுக்காது ஒரு பிறவியிலே அடையுமாறு ஊழ் வகுக்கின்றது என்பது தெரிகிறது. சிலரின் வாழ்வில் முற்பகுதி இன்பமாயும், பிற்பகுதி துன்பமாயும் அமைகிறது. சிலருக்கு இன்பமும் துன்பமும் மாறிமாறி வருகிறது. உலகத்தில் எப்பொழுதும் இன்பமாக இருப்பவர்களும் இல்லை. எப்பொழுதும் துன்பப்படுகிறவர்களும் இல்லை. சிலர் வாழ்நாள் முழுவதும் துன்பப்படுகின்றனே என்று சொல்லலாம். உண்மையில் அவர்கள் முற்பிறப்பில் முழுவதும் தீவினை செய்தவர்களே. எப்பொழுதும் இன்பமாக இருப்பவர்கள் முற்பிறப்பில் நல்வினை செய்தவர்களே ஆவார்கள். இதை நன்குஉணர்ந்தவர்கள் நமது முன்னோர்கள். துன்பத்தைக் கண்டு அஞ்சாமலும் இன்பத்தைக் கண்டு மகிழ்ந்துவிடாமலும் நடுநிலைமையோடு இருந்தார்கள். துன்பம் வந்தகாலத்திலும் அது தான் செய்த தீவினையால் வந்தது என்று எண்ணிப் புன்னகைபூத்த முகத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். இடுக்கண்



வந்தபொழுதும் சிரித்தார்கள். அதைக் கண்டு அழவும் இல்லை. அஞ்சவும் இல்லை. இந்த இன்பதுன்பங்கள் எல்லார்க்கும் போது. இல்லறத்தார்க்கும் உண்டு. துறவறத்தார்க்கும் உண்டு. ஊழ் இல்லறத்தார்க்கு இன்பத்திற்கு வேண்டிய பொருளைக் கொடுக்கிறது. துறவறத்தார்க்கு ஞானத்தைக் கொடுக்கிறது. சிலர் செல்வம் மட்டும் இருந்தால் இன்பமாக இருக்கலாம் என்று நினைக்கிறார்கள். இது தவறு. செல்வத்தால் வருவது மட்டுந் தான் இன்பமா ? மேலும் செல்வம் எல்லாம் இருந்தும் அதைத் துய்ப்பதற்கு சக்தி அற்றவனாக இருக்கிறவர்களை நாம் பார்க்க வில்லையா ? அரச பதவி இருந்தும் அதைத் துறந்துசென்ற மன்னர்களை நாம் பார்க்கவில்லையா ? எவ்வளவு முயற்சி செய்து பொருள் சேர்த்தாலும் அதை அனுபவிக்கக் கொடுத்துவைக்க வேண்டும். அது ஊழ் வகுத்த வகையினால்தான் அமையும்.

" வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. " (குறள் 377)

(தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Velur Devasthanm

This is my third or fourth visit to this Holy shrine but every time I find a new attraction and satisfaction in visiting this temple. The maintenance of the temple is very good - clean, orderly and inviting - and anyone who goes through the various pujas before the different deities in this temple is bound to feel the supremacy and glory of the Almighty. I commend the management on their excellent administration of this renowned temple.

(S-d) V. Karthikeyan,
Collector, Tonjore
11—1—57.

# விக்கிரம சோழனின் தில்லைப் பணிகள்

சிவநெறிச் செல்வர்,
திரு. கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L. அவர்கள்,
பிரின்ஸிபால், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

## முன்னுரை

விக்கிரம சோழன், முதற்குலோத்துங்க சோழனுக்கும் மதுராந்தகிக்கும்[1] பிறந்தவன்; 1093 முதல் 1118 வரை வேங்கியில் இருந்து அரசாண்டவன்; 1118ல் வேங்கியினின்று சோணாட்டுக்கு வந்து கி. பி. 1122 வரை தன் தந்தையுடன் இருந்து அரசாண்டவன்; முதற்குலோத்துங்கன் இறந்த பிறகு 1135 வரை சோழவரசனாக இருந்தான்.[2]

## மெய்க்கீர்த்திகள்

இவ்வரசனுடைய மெய்க்கீர்த்திகள் இரண்டுவகை தொடக்கங்களை யுடையவை; ஒன்று 'பூமாது (அல்லது) பூமகள்புணர' என்பது; மற்றொன்று 'பூமாலை மிடைந்து' என்பது. இவன் இளவரசுப்பருவத்து நிகழ்த்திய கலிங்கப்போரைக் குறிப்பதோடு, சிலவற்றுள் முதற்குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்திகளிற் காணும் தொடர்களும் விருதுகளும் இவன் மெய்க்கீர்த்திகளிற் காணப்படுகின்றன. இவனது தில்லைத் திருப்பணிகள் இவனது 10 ஆவது ஆட்சியாண்டில் (1128ல்) நிகழ்ந்தவை என்று இவனது பெரிய மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன.

## இளவரசு பருவத்தில் நிகழ்த்திய போர்கள்

இவன் வேங்கிநாட்டில் 1093 முதல் 1118 வரை அரசனாக இருந்தான் அல்லவா? அப்பொழுது இவன்செய்த போர்கள் சில.

[1] இரண்டாம் இராசேந்திர சோழனின் மகள் மதுராந்தகி எனப் பெற்றாள். இவள் பெற்ற மக்கள் எழுவருள் விக்கிரம சோழன் நான்காமவன்.

[2] விக்கிரம சோழனுலா, ஒட்டக்கூத்தரால் இவ்வரசன் பேரில் பாடப்பெற்றது என்பது இங்கு அறிதற்பாலது.



அவற்றுள் ஒன்று தெலுங்கவீமன் என்பவனோடு நடத்திய போராகும். இவன் வேங்கிநாட்டில் வடவெல்லையில் ஆண்டவன். இவனுக்குத் துணையாகக் கலிங்க அரசனும் சேர்ந்து கொண்டான். இவர்களை மிக்க இளைஞனாகிய விக்கிரம சோழன் எதிர்த்தான். தெலுங்கவீமன் மலைகளில் ஓடி ஒளிந்துகொண்டான். அவனது குளம்[3] என்னும் பகுதியை விக்கிரம சோழன் வென்றான்; கலிங்கநாட்டை எரி கொளுவினான்;[4] வெற்றியுடன் வேங்கியை அடைந்து இனிதிருந்தான்.[5]

## தில்லைப் பணிகள்

இளமைப் பருவத்திலேயே வெற்றிவீரனாகத் திகழ்ந்த விக்கிரம சோழன், தன் முன்னோர்போலத் தன் குலநாயகன் தாண்டவம் பயிலும் தில்லைக் கூத்தப்பெருமானிடத்து அளவு இலாத பக்தியுடையவனாய்த் தில்லையில் பல திருப்பணிகள் செய்துள்ளான். இவனது திருப்பணிகளை இவனது திருமழபாடிக் கல்லெழுத்து மிக விரிவாகக் கூறுகின்றது. அது வருமாறு :-

[3] தெலுங்கவீமன் ஆண்ட பகுதி கோலனு (modern Ellore) எனப்படும் என்றும், ஸ்ரீகாகுளம் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

[4] இவனது கலிங்கப்போர் "கலிங்க மிரியக் கடமலை நடாத்தி" என்று பிறவற்றுள்ளும் கூறப்பெற்றது. டாக்டர் உல்ஷ், 'இவன் கலிங்கத்தின் மேல் படையெடுக்கவில்லை' என்றும் இவன் தந்தை வெற்றியே இவன் மெய்க்கீர்த்தியில் கூறப்பெற்றது என்றும் கூறுவர். ஆனால் திரு. K. A. N. அவர்கள் இவன்பேரில் பாடப்பெற்றதாகக் கருதப்பெறும் 'கலிங்கப்பரணி' என்ற நூலைக் குறிப்பிட்டு, அந்நூல் கிடைக்குமாயின் இப்போர் குறித்து அறியக் கூடும் என்பர்.

[5] " குளத் தெலிங்க வீமன் விலங்கல் மிசை யேறவும்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கி னிதிருந்து
வடதிசை வாகை சூடி. "

என்ற கல்லெழுத்துப் பகுதி இச் செய்திகளைத் தெரிவிக்கும்.

" வாழி வாழியிம் மாநிலங் காக்(கென)த்
திருமணி போற்றேட் டெழுதுபத் தாண்டு
வருதிறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலும்
செம்பொன் னம்பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லேகளும்
உலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்
குலவரை உதைய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்து பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேந்து
இருநிலந் தழைப்ப இமையவர் களிப்பப்
பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பல நிறைந்த அற்புதக் கூத்தர்
இம்பர் வாழ எழுந்தருள் வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து
பருத்திரள் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயரால் செய்துசமைத் தருளிப்
பைம்பொற் குழித்த பரிகல முதலாச்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமும்
அளவில் லாதன வொளிபெறச் சமைத்துப்
பத்தா மாண்டில் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதிவா ரத்துத்
திருவளர் மதியின் திரயோதசிப் பக்கத்து
இன்ன பலவும் இனிதுசமைத் தருளி. "

## திருப்பணிகள் விளக்கம்

" வாழி வாழி இம்மாநிலங் காக்க " என்று எழுதிய பொன் தகடுகளில் (பொன் தாம்பாளங்களில்)[6] மன்னர் திறையாகப்

[6] திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அண்மையில் தில்லேக் கூத்தப் பெருமானுக்கு ரூ. 4000 மதிப்புள்ள ஒரு பொன் தாம்பாளம் அளித்தமை இங்கு அறிதல் தகும்.



பொற் குவைகளை அளித்தனர். இங்ஙனம் பத்தாமாண்டில் அளிக்கப்பெற்ற பொன் முழுதும் தில்லைத் திருப்பணிகளுக்கே விக்கிரம சோழன் செலவு செய்தான். அப்பணிகள் பின் வருமாறு :-

1. சக்கரவாளகிரி உதயக்குன்றமொடு நின்றதுபோலச் செம்பொனம்பலம் சூழ் திருமாளிகையும், கோபுர வாசலும், கூடசாலைகளும் பொன் வேயப்பெற்றன.

2. பலிபீடமும் விசும்பில் ஒளிவீசுமாறு பொன் வேயப் பெற்றது.

3. உலகம் தழைக்க, இமையவர் களிக்கப் பூரட்டாதி உத்திரட்டாதி ஆகிய இவ்விரு நாட்களிலும், பெரிய திருநாள் பெரும் பெயர் விழாவில்[7] தில்லைக் கூத்தப்பெருமான் உலா வருதற்குரிய தேர்[8] பொன் வேயப்பெற்றது. தேர் முத்து வடங்களால் அழகுபடுத்தப்பெற்றது.

4. மணிகள் பதிக்கப்பெற்ற மாளிகைகளை அமைத்து, அரசன் பெயரால் விக்கிரம சோழன் திருவீதி என்று ஒரு வீதி அமைக்கப்பெற்றது.

5. பரிகலம் முதலியனவும், கற்பக தருவும், விருது சின்னங்களும் அளவில்லாதன செம்பொன்னால் செய்து தரப் பெற்றன.

இவ்வரசனது பத்தாமாண்டில் சித்திரைத் திங்களில் அத்த நக்ஷத்திரம் கூடிய ஞாயிற்றுக்கிழமை வளர்மதி 13-ம் நாளில் மேற்குறித்த திருப்பணிகள் எல்லாம் செய்து முடிக்கப்பெற்றன.

" இதிற் குறிப்பிட்ட நாளைப்பற்றிய செய்தியைக் கணக் கிட்டுக் கீல்ஹார்ன் என்பார், இது 15—4—1128 ஆகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.[9]

## ஆய்வாளர் குறிப்புக்கள்

தஞ்சாவூர் தலைநகராக இருந்தபொழுது திருவாரூர்க் கோயில் சிறப்புற்றிருந்தது. கங்கை கொண்ட சோழபுரம்

[7] இவ்விழா " பெரும் பெயர் விழா " எனப்பெற்றது.

[8] தேர், " தேர்க் கோயில் " என்று மெய்க்கீர்த்தியில் கூறப் பெற்றது காண்க.

[9] உலாக் கொண்ட மூவர்—பக்கம் 59.

சோழரது தலைநகரம் ஆனது முதல் தில்லை, சிறப்புப்பெறலாயிற்று. குலோத்துங்கசோழன் I காலத்தே, நரலோகவீரன் என்பான் தில்லைத் திருக்கோயிலுக்குப் பல பணிகள் புரியத் தொடங்கினன். அப்பணிகளை விக்கிரம சோழன் தன் தகப்பன் காலத்துக்குப் பின் செய்து முடிக்கவேண்டும் என்ற ஆர்வங் கொண்டு மெய்க்கீர்த்தியில் விவரித்துள்ளவாறு பணிபல புரிந்து முற்றுவித்துள்ளான். இத் திருப்பணிகள் நிறைவேறிய காலத்திற்குப்பிறகு வெளியிடப்பெற்ற கல்வெட்டுக்கள் திருக்கோயிலின் முதற் சுற்றுமதிலை "விக்கிரமசோழன் திருமாளிகை" என்று குறிப்பிடுகின்றன; கோயிலைச் சுற்றியுள்ள தெருக்களில் ஒன்றினை " விக்கிரம சோழன் திருவீதி " என்று கூறுகின்றன.

இங்ஙனம் விக்கிரம சோழனது தில்லைத் திருப்பணிகள் விரிவாகக் கல்லெழுத்தினின்று அறியப்பெற்ற போதிலும், விக்கிரம சோழனைப் பாடிய ஒட்டக்கூத்தர் விக்கிரமசோழனுலாவில் இத் திருப்பணிகளைக் குறிப்பிடவில்லை என்பது கருதத்தக்கதொன்றாகும்.[10]

## முடிப்புரை

இங்ஙனம் சிவபக்தி மிக்கவனுய்த் தில்லைத் திருப்பணிகள் பல புரிந்த விக்கிரம சோழனுடைய மகன் இரண்டாம் குலோத்துங்கனும் தில்லையில் பல திருப்பணிகளைச் செய்தான். என்று அறிகிறோம். நரலோகவீரன், காலிங்கராயன் போன்ற அரசியல் அலுவலர்களும் பல திருப்பணிகள் புரிவதில் ஈடுபாடு உடையவராய் இருந்தனர். சோழர்கள் யாவரும் சிவபக்திச் செல்வர்கள். எச்சோழவரசனும் எஞ்ஞான்றும் பிற மதச் சார்புடையனுனமைக்குச் சான்றில்லை. அவர் தம் சமயப்பணிகள் மிகவும் சிறப்புடையவை. அவற்றுள்ளும் அவர் தம் தில்லைத் திருப்பணிகள் முதலிடம் பெறுவன. சோழர் தம் தில்லைத் திருப்பணிகளின் தொகுப்பு, தருமபுர ஆதீன வெளியீடாகிய சிதம்பரம் என்ற நூலுள் பக்கம் 57 - 173 வரை தரப் பெற்றுள்ளது. அதனைப் படித்து, ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைப் போற்றிக் குருவருளும், தில்லைப் பெருமான் திருவருளும் பெற்றுய்வோமாக !

தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி !!

---

[10] " சிதம்பரம் " என்ற தருமபுர ஆதீன வெளியீடு பக்கம் 165

# பழந் தமிழ் நூல்களில் உயிர் வகைகள்

வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர், ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

(மலர் 16, இதழ் 4, பக்கம் 274 இன் தொடர்ச்சி)

### கோவேறு கழுதை

இது இலக்கியங்களில் அத்திரி என வழங்கப்படுகின்றது. அரசன் ஏறுதற்குரிய சிறப்புடையது என்ற காரணம்பற்றிக் கோவேறு கழுதை எனப் பெயர்பெற்றது. அகப்பொருளில் கூறப்படுந் தலைவன் நெய்தல் நிலத்திலுள்ள தன் தலைவியைக் காண இக் கோவேறுக் கழுதையின்மேல் ஏறிச்செல்வதுண்டு. நெய்தல் நிலத்தில் உப்பங்கழிகளைத் தாண்டி வரவேண்டியிருத்தலால் இந்த ஊர்தியைத் தலைவன் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. குதிரைகள் செல்லவியலாத சேற்று நிலத்திலும் இக் கோவேறுக் கழுதை எளிதிற் செல்லும் இயல்பினது. தலைவனை ஏற்றிக்கொண்டு நெய்தல்நிலச் சேற்றில் நடந்து சென்றமையால் அதன் உடம்பில் சேறு படிந்திருக்கும். அதன் குளம்பில் சிவந்த இருமீன் ஒடுங்கிக்கிடக்கும். இதனை,

> " கழிச் சேறுடிய கணைக்கா லத்திரி
> குளம்பினும் சேயிரு வோடுங்கின. " (நற்றிணை 278)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. உப்பங்கழியின்கண் இக் கோவேறு கழுதை செல்லுகின்றபொழுது சுறாமீன் தாக்கிய காரணத்தால் இதன் கால்கள் புண்ணுயின என்ற நிகழ்ச்சியை :

> " கழிச் சுறு வெறிந்த புட்டாளத்திரி. " (அகநா. 120)

என்ற அடி விளக்குகின்றது. புண்ணையுடைய தாள் என்னும் பொருளில் ' புட்டாள் ' எனப்பட்டது. தாள் - கால். சிலப்பதிகாரத்தில் இந்திரவிழாவின் முடிவில் மாதவியோடு நீராடச் சென்ற கோவலன் இந்தக் கோவேறு கழுதைமேல் ஏறிச்சென்றதாகக் கூறப்பட்டுள்ளது.

### கழுதை

இது,

" வெள்வாய்க் கழுதைப் புல்லினம். " (புறநா. 392)

எனக் கூறப்படுகின்றது. கழுதையின் வாய் வெளுத்திருக்கும் காரணத்தால் வெள்வாய்க் கழுதை எனவும், ஏனைய விலங்குகளினும் இழிந்தது என்று கருதப்படுவதால் 'புல்லினம்' எனவும் கூறப்பட்டுள்ளது. இதன் செவிகள் மேல் நோக்கி உயர்ந்திருத்தலாலும் நெடுவழி போகும் வணிகச்சாத்துக்குத் தக்க ஊர்தியாய்ப் பாரந்தாங்கும் இயல்பினதாய் அவ்வணிகர் குழுவோடு செல்லும் இயல்பும்பற்றி :

" அணர்செவிக் கழுதை சாத்தோடு வழங்கும். " (பெரும்பாண்)

எனக் கூறப்படுகின்றது. வெளுத்த வாயும் நெடிய செவியும் உடையது கழுதையென்பதும் பாரம் சுமந்து வணிகர்க்குத் துணை செய்யும் இயல்பினது என்பதும் அறியலாம்.

### செந்நாய்

சேந்நாய் என்பது காட்டில் வாழும் ஒருவகை நாய். இது மிக்க நேர்மையும் அன்பும் உடையதாகக் காணப்படுகின்றது. குட்டியை ஈன்ற பெண் செந்நாயோடு கூடிச்செல்கின்ற ஆண் சேநநாய் ஒன்று தன் குட்டியினிடத்தும் பிணையினிடத்தும் தான் வைத்த அன்பினல் தனக்கு உணவாகக்கூடிய பெண் மானைக் குட்டியோடு கண்டபோழுதும் அதைக் கோல்லாது கோள்ளாது அகலுமாம். என்னே இச்செந்நாயின் நேர்மை ! என்னே இதன் அன்புறு செய்கை ! இந்நிகழ்ச்சியை :

" ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாயேற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும். " (ஐங். 354)

என்றதால் அறியலாம். இந்தச் செந்நாயின் கழுத்தில் மயிர் செறிந்து கவிழ்ந்து தொங்கும். இதற்குக் காட்டுப் பன்றியுணவாயினும் குட்டிப் பன்றியைக் கண்டு அதைக் கோள்ளாது அருள் நெஞ்சத்தோடு அகலும் என்பதை :

" கவிழ்மயிர் எருத்தின் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியும். " (குறுந். 397)



என்று கூறியதால் அறியலாம். இச்செந்நாயின் பற்கள் கூர்மையானது என்பதும், இது தன் கருவுற்ற பிணவிற்கு உணவு தரும் பொருட்டுக் கள்ளிகள் நிறைந்த காட்டிடத்தே பன்றியைப் பற்றப்பார்க்கும் என்பதும் பின்வரும் அடிகளால் உணரலாம்.

" வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும். " (ஐங். 323)

என்பது காண்க.

### நீர் நாய்

இது நீரில் வாழும் விலங்கு என்பதை இதன் பெயரே காட்டுகின்றது. இது வாளைமீனை விரும்பியுண்ணும் இயல்பினது.

" வாளை நீர்நாய் நாளிரை பெறூஉம். " (புறநா. 283)

என்பது காண்க. இது நீர்க்கு அருகிலுள்ள பிரம்புப் புதரில் தங்கும் இயல்பினது. இதனுடம்பில் வரிகள் இருக்கும். இதன் மேல் புலால் நாற்றம் வீசும் என்பன,

" அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய். " (குறுந். 364)

" போய்கைப் பள்ளிப்புலவு நாறு நீர்நாய். " (ஐங். 63)

என்ற அடிகளால் உணரலாம்.

### வீட்டு நாய்

மக்கள் தம் வீட்டுக் காவலுக்காக நாயை வளர்ப்பதுண்டு. வீட்டு நாயேயாயினும் கோபமும் கோடுமையும் உடைமைபற்றிப் பகலில் இதனைக் கட்டிவைப்பதும் இரவில் கட்டவிழ்த்துக் காவலுக்காக விடுவதும் பண்டும் வழக்கமுண்டு. இதனை :

" புலிக்கணத்தன்ன நாய் தோடர் விட்டு
முருகனன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்லனுக. " (அகநா. 182)

என்பதால் அறியலாம். 'புலிக்கணத்தன்ன' என்ற உவமையால் நாயின் தோற்றமும் செயலும் அறியலாம். இரவில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுமிடத்து நாய் தோடர்விட்டமை

கூறியிருத்தலின் பகற்காலத்துக் கட்டிவைத்திருந்தமை பெறப் படும். மேலும் சில நாய்கள் வேற்றூர் மனிதரைக் கண்டாலும் வேற்றுக் குரலைக் கேட்டாலும் குரைக்கும் இயல்பின.

" உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லினேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலை மாறு கூறலின் மனைய
விளியறி ஞமலி குரைப்ப வெரீஇய." (அகநா. 140)

என்பது காண்க.

உமணருடைய காதல்மிக்க மகள் ஒருத்தி சில திரண்ட ஒளி யுடைய வளைகள் ஒலிக்குமாறு கைகளை வீசிக்கொண்டு நடந்து சேரியில் உள்ளோர் கேட்குமாறு, " நெல்லின் நேரே வெண்கல் உப்பு" என்று கூவுகின்றாள். அவள் விளிக்குங் குரலை வேற்றுக் குரல் என அறிந்த நாய் குரைக்கின்றது. உமணப்பெண் அஞ்சு கின்றாள்; என்பது அவ்வடிகளின் கருத்து.

## முயல்

இது காட்டில் வாழும் மெல்லிய இயல்புடைய விலங்கு. இதனுடைய செவிகள் நீண்டிருக்கும். இதனுடம்பினளவு குறுகியதாய் இருக்கும். முயலின் உடம்பளவிற்கு ஏற்றவா றின்றிச் செவிகள் நீண்டிருத்தலின்

" நெடுஞ் செவிக் குறுமுயல். " (பெரும்பாண்)

என இது பேசப்படுகிறது.

" நெல்லிக்காய் கண்டன்ன,
குறுவிழிக் கண்ண கூரலங் குறு முயல்
முடந்தை வரகின் வீங்குபீ ளருந்துபு
....................நீர் கண்டுண்ணும் " (அகநா. 284)

என்று கூறப்படுவதால், இதன் கண், நெல்லிக்காய்போன்றது என்பதும், வரகின் கதிர் வெளிவராத முன்னர் அதன் பீளினை அருந்திப் பின் நீரைத்தேடி யுண்ணும் என்பதும் அறியலாம்:



கள்ளியின் பொருக்கரையில் மறைந்திருந்து வரகரிந்த அரிதாளில் மேயும் எலியைப்பிடிக்கப் பார்த்துக்கொண்டிருக்கும் வேட்டுவச் சிறுவர்கள் முயலைக்கண்டு வில்லெடுத்து ஆர வாரிப்பார்கள் எனவும் அவ் வொலியைக் கேட்டுப் பயந்து அம் முயல் ஓடும் எனவும் அவ்வேகத்தில் மன்றிலுள்ள கரிய மட்கலங்கள் உடையும் எனவும் ஆவூர் கிழார் தாம்கண்ட காட்சியை விரித்துக் கூறுகின்றார்.

" புதுவரகு அரிகால் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறுஅர் வில்லெடுத் தார்ப்பின்
பெருங்கட் குறுமுயல் கருங்கலனுடைய
மன்றிற் பாயும் வன்புலம் " (புறநா. 322)

என்றது காண்க.

## குரங்கு

'கோடுவாழ் குரங்கு' என்றுஇதனைத் தொல்காப்பியர் கூறுகின்றார். இதனால் மரக்கிளைகளில் வாழும் இக்குரங்கின் இயல்பு புலனாகும். ஒரு மயில் ஆடிக்கொண்டிருக்கிறது ஆண்குரங்கு ஒன்று பலாப்பழத்தைப் பறித்து வைத்துக் கொண்டு அருவி யொழுகும் பாறையின் பக்கத்தில் அமர்ந் திருக்குங்காட்சி ஆடுகின்ற விறலிக்குப் பின் மத்தளம் அடிப்போன் காட்சிபோன்றுளது என்று புகழ்கின்றார். அஞ்சி யத்தைமகள் நகையார் என்ற நல்லிசைப் புலமை மெல்லியலார்

" முடவு முதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல் கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்ன தாகக் கோடியர்
விழவுகொண் மூதூர் விறலி பின்றை
முழவன் போலஅகப்படத் தழீஇ
இன்றுணைப் பயிரும் குன்றம் " (அகநா. 352)

என்பது காண்க.

ஒரு மயிலாடும் ஒப்பிலாக் காட்சியைப் பெண்குரங்கு கள் கூடிப் பார்த்துக்கொண்டிருக்குங் காட்சியைக் கண்ட கபிலர்,

" மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலி ஆடுமயில் " (அகநா. 82)

என்று கூறுகின்றார். இங்குக் குரங்குகள் தம் சேட்டைகளை அடக்கிக்கொண்டு அமர்ந்து அழகிய மயிலின் ஆடலைக்கண்டு களிக்கும் தன்மையால் " மந்திநல்லவை " என்று புகழ்ந் துள்ளமை காண்க.

ஒரு குரங்கு, பலாப்பழத்தைப் பறித்து உண்ட பழக் கத்தால் அப்பலாமரத்தில் இரவலர்கள் தோங்கவிட்டிருந்த மத்தளத்தைப் பலாப்பழமெனக் கருதித் தோட்டதாக அம்முழவு ஒலிசெய்தது. அம் முழவோலி கேட்டு அன்னச் சேவல் அவ்வோலிக்கு மாறுபட அஞ்சிக் கூவும் நிகழ்ச்சியை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் இயம்புகின்றார். (புறநா. 128)

குரங்கு பீறற்குரிய உணவுப் பொருள்களை அவர்களை ஏமாற்றியுண்ணும் திறமுடையது. யானைக்கு நெய்யோடு கலந்த கவளம் கோடுக்க அக்கவளத்தை ஒரு மந்தி கவரும் காட்சியை,

" நெடுங்கை யானை நெய்மிதி கவளம்
கடுஞ்சூல் மந்தி கவரும் " (பெரும்பாண்)

என்று கூறியிருத்தல் காண்க. கடுஞ்சூல் மந்தி ஆதலின் விரும்பியதைக் கவர்ந்து உண்ணுவதாக என யானை பார்த்துக் கோண்டிருக்கும்போலும்.

உப்பு விற்கும் உமணர் வண்டியோடு வந்த மந்தி நீர்த்துறையில் சிதறிக் கிடக்கும் முத்துக்களைக் கிளிஞ்சலில் இட்டு உமட்டியர் குழந்தைகள் அழாவண்ணம் கிலி கிலி ஆடும் நிகழ்ச்சி சிறுபாணாற்றுப்படையில் சிறப்புறக் கூறப் பட்டுளது.

இதுவரையில் கண்ட குரங்கின் திருவிளையாடல்கள் எல்லாம் குரங்குச் சேட்டைஎன்று தள்ளிவிட்டாலும் இனி கூறப்போகும் நிகழ்ச்சியை அவ்வாறு யாரும் புறக்கணிக்க முடியாது என்பதை முன்னரே கூறி விடுகிறேன். காரிய



கண்களையும் வன்மையையுமுடைய ஓர் ஆண் குரங்கு இறந்து பட்டதாகக் கணவனை இழந்தும் கைமை நோன்போடு வாழ விரும்பாத அழகிய மந்தி தன் இளைய குட்டியைக் காப்பதற் காகவேனும் உயிர்வாழ விரும்பாது அக்குட்டியைத் தன் இனக் குரங்கிடம் விடுத்துவிட்டு உயர்ந்த மலையிலேறிப் பாய்ந்து உயிர்விட்ட செய்தியைத்தான் கூறினேன். இவ்வரிய நிகழ்ச்சியைக் கடுந்தோட் கரவீரன் என்ற புலவர் நமக்குத் தெரிவிக்கின்றார்.

" கருங்கட்டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர்மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல்நாட " (குறுந். 69).

என்பது காண்க. தா - வலிமை. பெரும்பிறிது-மரணம், பறழ்- குட்டி, கிளை - சுற்றம்.

(தொடரும்)

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapura Ahinam

Velur Sri Vaithinathaswami Devasthanam

Vaithiswarankoil, Sirkali taluk.

This is one of the happiest days in that I had good and inspiring darshan in three temples - Tirucadaiyur, Sirkali, and Vaithiswarankoil. I am greatful to His Holiness the Pandarasannathi of Dharmapuram and his representatives. May evil disapper and Godliness prevail in the world.

(S-d) P. T. Rajan,
9—1—57.

# உணர்ந்து செயலாற்று

திரு. ச. வைத்தியலிங்கம் அவர்கள்
நாகை

மாலை மணி ஐந்திருக்கும். சூரியன் மேல்வானத்தில் மறைந்துகொண்டிருந்தான். கடற்கரை யோரத்தில் உள்ள சிறிய மணல் மேட்டின்மீது தனிமையில் உட்கார்ந்திருந்தேன். மனதில் ஏதேதோ பல எண்ணங்கள் சூழ ஒருநிலைபடாது பலவாறாக சிந்தனை அலைகள் எழும்பிக்கொண்டிருந்தன. திடீரென என் மனதில் காலையில் நிகழ்ந்த சம்பவங்கள் உதயமாயின. அவற்றைப்பற்றி நினைக்கும்போழுது என் மனம் ரோம்பவும் புழுங்கி வருத்தமுற்றது. உண்மையில் உள்ளம் படைத்த மனிதனாக இருந்தால் அவ்வாறு கூறவேமாட்டான். அதுவும் படித்தவன், போருள் உடையவன், பல நூல்களைக் கற்றாராய்ந் தவன், தவறாது தேய்வ வணக்கமும் சேலுத்துபவன் அம் மனிதன். அச் சம்பவம்,

" இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லோரும் செய்வர் சிறப்பு. "

என்று இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கூறிச் சேன்ற உத்தமரது போன் மோழிக்கு இலக்காக இருந்தது.

அப் பேண்மணி ஓர் ஏழை என்பதை அவள் தோற்றமே சித்திரித்துக் காட்டியது. ஏழைதான்; ஆனால் முகத்தில் ஓர் அலாதி போலிவு. அகம் களங்கமற்றதேன அவள் முகம் தோற்றமளித்தது. கையில் ஏந்திய சிசுவுடன் பிச்சைக்கு வாயிற் படியில் காத்துக்கோண்டிருந்தாள். அழகான ஆண் குழந்தை. காலை வெய்யில் அக் குழந்தையின் மேல் பட்டு பசுமையான சேந்நிறத்தைக் கருமையான சேந்நிறமாக மாற்றியது. வெய்யில் சூடு தாங்காமல் குழந்தை முனகிக்கோண்டு, லேசாகமுண்டியது. இறுக அணைத்துக்கோண்டே அப் பேண்மணி அம்மா ஏதாவது பிச்சை போடுங்க என்று சப்தம் போடுகிறாள். உள்ளே யிருந்து பதிலில்லை. முதல் முறை, இரண்டாவது முறை, மூன்றாவது முறையாக சப்தம் கோடுக்கிறாள். உள்ளிருந்து ஓர்



பேரியவர் வந்தார். தோற்றத்திற்கு ஏற்ற உடல் கட்டு, சுமார் நாற்பதுக்கு மேற்பட்ட வயது, இடையில் வேண்பட்டினால் பஞ்ச கச்சக்கட்டு, அதன்மேல் ஐந்துமுழப் பட்டோன்று; கழுத்தில் தங்கமுகப்பிட்ட சங்கிலியும் அணிந்திருந்திருந்தார். நேற்றி நிறைய வேண்ணீறு, அதன்மேல் சந்தனமும், குங்குமமும் கோண்ட போட்டோன்று. அப்போழுதுதான் இறைவணக்கம் சேலுத்திவிட்டு வருபவர் போலிருந்தது. ஆசாரத்திற்குட்பட்ட அலங்காரம் ஒருங்கே நன்றாகத்தானிருந்தது. ஆனால் முகமோ கனல் கக்கியது. வாயிற்படி ஓரம் வந்ததும் வராததுமாகப் பிச்சைக்குக் காத்துக்கோண்டிருக்கும் பேண்மணியைப் பார்த்து, ஏண்டி காலங்காத்தாலே காள்காளேன்று கத்துகிறாய். நீ போடுகிற சப்தத்திலே பூஜை பண்ணமுடியவில்லையே. எங்கா வது வேலை பார்த்து சோறு தின்றால் என்ன ? என்று ஆவேச மாகப் பேசினார்.

அப்பேண்மணி :- ஐயா, வேலை கிடைக்கவில்லை, என்னை நம்பி ஒருவரும் வேலை கோடுக்க மாட்டேங்கிறாங்கையா, கைக் குழந்தையுடன் கஷ்டப்படுகிறேன்; ஏதாவது வேலை யிருந்தால் கோடுங்க, சேய்கிறேனய்யா. பேரிய மனதுசேய்து ஏதாவது உதவி சேய்யணுமுங்க என்று கேட்டாள்.

அப் பேரியவர் ஆமாண்டி, ஆமாம். வேலைபார்த்துச் சோறு தின்னச்சோன்னால் என்னையே வேலை கேட்கிறாயே உழைத்துத் தின்கிறவளாய் இருந்தால் ஏன் இப்படி பிச்சை கேட்க வருகிறாய் கோழுப்பேடுத்தவள். போடீ - போ நிற்காதே என்று கோபமாகக் கூறினார்.

அப்பேண்மணி, அப்படிச் சோல்லாதீர்களய்யா! ரோம்பவும் கஷ்ட படுகிறேனய்யா; ஏதாவது பிச்சைபோட்டு உதவி சேய்யுங்கய்யா ! என்றுகூறி, மறுபடியும், கோபிக்காதீர்களய்யா எங்கமாதிரி ஏழைக்கு உதவினால் ஆண்டவன் அருள் புரிவாருங்க, அன்பு இருந்தால்தான் ஆண்டவன் அருள் கிட்டு முங்க, அன்பில்லாதவர் ஆண்டவன் அருளைப் பேறமுடியாதுங்க, அன்பே தாங்கய்யா தேய்வம் என்று கூறினாள்.

அவ்வளவுதான் அப்பேரியவருக்குக் கோபம்வந்துவிட்டது. அப்பேண்மணியைப் பார்த்து, பிச்சை கேட்பதிலும் அகம் பிடித்தா கேட்கிறாய்? எனக்கா புத்திசோல்கிறாய், சோம்பேறிக்

கழுதை, வேலை கிடைக்காவிட்டால் எங்காவது ஆற்றில் குளத்தில் விழுந்து சாகேன் என்று சினத்துடன் அப்பெண்மணியை இழித்துப்பேசி, நிற்காதே தொலைந்துபோ, தரித்திரம் என்று சொல்லி வேகமாக வாயிற்கதவைத் தாளிட்டுக்கொண்டு உட் சென்றுவிட்டார்.

அட தெய்வமே! என்று சொல்லிக்கொண்டு அய்யா, நான் பிச்சை எடுத்தாலும் மானத்தோடு வாழ விரும்புகிறவள் இந்த சிசுவுக்காகத்தான் என் உயிரை வைத்திருக்கிறேன். இதை யெடுத்துவளர்க்க யாராவது முன்வந்தால் கொடுத்துவிட்டு என்முடிவைத் தேடிக்கொள்வேன் என நீர்வழிந்த கண்களுடன் இதயம் நொந்து இயம்பிக் கொண்டே, இறைவ! என்னைச் சோதிக்காதே நான் மானத்தோடுவாழ அருள்செய் என வேண்டி இறைவன் திருப்பெயரை உச்சரித்தவாறே மெல்ல நடந்து சென்றாள்.

இச் சம்பவம்தான் என் புறக்கண்ணெதிரில் பறந்த கடலிலே தோன்றி மறைகின்ற அலைகளுடன் போட்டி யிடுவது போல் அகக்கண்ணுள் அலைவுற்றுக் கொண்டிருந்தது. ஆகா! இறைவன்பால் எத்துணை பற்று அப்பெண்மணிக்கு எவ்வளவு பெருமை,

"இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி" (குறள்)

என்றும் இரப்பவர்க்குக் கோபம் கூடாது. வறுமைத் துன்பமே அவர்களுக்கு அறிவு புகட்டும் என்ற வள்ளுவரின் வாய் மொழிக்குச் சான்றாக அவ்வம்மணி பொறுமையுடன், தன்னை இகழ்ந்துரைத்த அப்பெரியவரிடம் வெகுளாமல் சென்று விட்டாளே! வறுமையில் நலிவுறும் அப்பெண்மணிக்குக் கோப மில்லை; ஆனால் பொருள் வசதியுடனும் இதர சுகபோகங்க ளுடனும் வாழும் அப் பெரியவருக்குத்தான் எவ்வளவு கோபம்! இருந்தாலும், படித்த மனிதனுக்கு இவ்வளவு கோபம் இருக்கக் கூடாது. கடவுள் அன்புவடிவம் கொண்டவன் அக்கடவுளுக்கு வணக்கம் நாள் தவறாமல் செலுத்தும் இம்மனிதனுக்கு அன்பும் பொறுமையும் கொஞ்சம்கூட நெஞ்சத்தில் இல்லையே! புறத்தே பொறுமையின் அடையாளத்திற் கேற்ற அலங்காரச் சின்னங்கள் அகத்தே அகங்கார அழுக்கு. செங்கரும்பென வெளித்தோற்றம்;



பேய்க்கரும்பென உட்தோற்றம். இவ்வாறு இம்மனிதர் செயலாற்றிக்கொண்டிருப்பது. இவர் கற்ற நூலும் செலுத்தும் கடவுள் வணக்கமும் மணமற்ற மலர்போன்றல்லவோ இருக்கிறது. இம்மனிதர்தாம்கற்ற நூலைக்காற்றோடு பறக்கவிட்டு விட்டாரோ! அல்லது ஏட்டளவில் இருக்கச்செய்திருக்கிறாரோ !! கடவுள் வணக்கம் கடமைக்குத்தான் செய்கிறாரோ! என்னவோ! என என்மனதில் ஐயத்தின்மேல் ஐயம் உதித்து உண்மையை உள்ளத்தில் உணர்ந்திக்கொள்ள முடியாமல் சிந்தனை அலைமீது மிதந்துகொண்டிருக்கும்போது எனக்குப் பின்பக்கமாக சற்று தொலைவி லிருந்து ஒருபெரியவர் பாடும் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். அப்பெரியவர் பாடிக் கொண்டே நான் உட்கார்ந்திருக்கும் திசையை நோக்கி நெருங்கி வந்து கொண்டிருந்தார். அவர் பாடும் பாட்டொலியும் என் செவிக் கேட்டியது. அவர் பாடியது:-

"கட்டோடே கனத்தோடே வாழ்கின்றே மென்பீர்
கண்ணோடே கருத்தோடே கருத்தினைக் கருதீர்
பட்டோடே பணியோடே திரிகின்றீர் தெருவில்
பசியோடே வந்தாரைப் பார்க்கவு நேரீர்
கொட்டோடே முழக்கோடே கோலம் காண்கின்றீர்
குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்
எட்டோடே இரண்டுசேர்த் தெண்ணவு மறியீர்
எத்துணை சொல்கின்றீர் பித்துல கீரே." (அருட்பா)

பாட்டு முற்றுவதற்கும் பெரியவர் என்னருகில் நெருங்கி வருவதற்கும் சரியாக இருந்தது. ஆகா! எவ்வளவு பொருள் நிறைந்த பாட்டு. உண்மை யறியாது அலைந்துக் கொண்டிருந்த உள்ளத்திற்கு உண்மையை உணர்த்திக் காட்டியது. அப் பெரியாரது முகம்தான் எவ்வளவு பொலிவுடன் விளங்கியது. அவரது தூய வெண்ணிற ஆடையும், முழுமதியோத்த அவரது முகமும், புன்சிரிப்புடன் கூடிய பார்வையும் என்னைச் சிறிது நேரம் அவரைப் பார்த்தவாறே திகைக்க வைத்துவிட்டது. அவரது அகமும் புறமும் ஒருங்கே அவாவற்றது. கள்ளம் கபடமற்றது என என் மனம் உணர்ந்தது. அவரையே உற்று நோக்கிக்கொண்டிருந்த என்னை மலர்ந்த முகத்துடன் பார்த்தார், சட்டென்றெழுந்து, அப் பெரியவருக்குச் சிரம் வணங்கி, கரங் கூப்பி, அய்யா வருக! என வணக்கம் கூறி வேண்டிநின்றேன். பெரியவரும் நீங்காப் புன்முறுவலுடன் அமர்ந்தார்.

நின்றுகொண்டிருந்த என்னை நோக்கி வாழ்கஎன என்னை வாழ்த்தித், தன்னெதிரில் அமருமாறு சாந்தமாக சமிக்ஞையோடு சொன்னார். அவரது ஆணையைச் சிரமேற்கொண்டு கூப்பிய கரத்தோடு அமர்ந்தேன். குழந்தாய்! ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்த முகம்போல் இருக்கிறதே. முடிவும் உணர்ந்து கொண்டாயோ என்று என் முகத்தோற்றத்தைப் பார்த்து வினவினார்.

அய்யா! நல்ல தருணத்தில் தங்கள் பாட்டொலிதான் உண்மையையுணர்த்திக் கொஞ்சம் அமைதிதந்தது. இருந்தாலும் தாங்கள் என்மீது கருணை கூர்ந்து என் அகத்தேயுள்ள மயக்கத்தைத் தீர்க்கவேண்டுமென பணிவுடன் கூறி, நான் சிந்தித்துக் கொண்டிருந்த சம்பவங்களையும் குறிப்பாகச் சொன்னேன்.

அப்பொழுது அவரது மதிமுகத்தில் அமைதியான மகிழ்ச்சி பொங்க, நல்லது குழந்தாய்! மனிதன் கற்றறிய வேண்டியவை களெல்லாம் கற்றறிகிறான். இதுதான் தெய்வநெறி, அதுதான் தெய்வநெறியெனக் குறிப்பிடுகிறான். தவறாது சகல ஆசாரங் களுடனும் பூஜை செய்கிறான். ஆனால் அவன் கைக்கொள்ளும் நெறியோ கற்றறிந்ததற்கும் கடவுள் பூஜைக்கும் மாறாகவே இருக்கிறது. காரணம் அவ்விரண்டையும் சேர்த்து சிந்தித்துப் பயனுள்ள முடிவுக்கு வரமுயல்வதை விட்டுவிடுகிறான். அன்பே கடவுள் என்று கூறுகிறான். கூறும் தருவாயோடு அப் பொன் மொழியை மறந்துவிடுகிறான். 'அருளருவி வழிந்து வழிந் தொழுக ஓங்கும் ஆனந்தத் தனிமலையே! என வாயாரப் பாடு கிறான். ஆனால் மலையளவு அருளையும் ஆனந்தத்தையுமே உருக்கொண்ட ஆண்டவனை நேசிக்கும் அன்பரிடத்து கைப் பிடிக்கு அடங்கக்கூடிய கருங்கல் அளவுக்குக்கூட ஆனந்தத் தையும், அருளையும், அன்பையும் காணமுடியவில்லை. மறை முடிக்குப் பொருத்தமுறு மணியே என மனங்குளிர இறைவனைப் போற்றுகிறான். இறைவனது மறைநெறியை இறைஞ்சுகின்ற தருணத்தோடு மறைந்துவிடுகின்றான். கோதகன்ற யோகர் மனக்குகையில் வாழும் குருவே எனக் குளிர்ந்த இசை ஒலிக் கின்றான். குற்றமற்றவர் மனத்திலிருக்கும் இறைவன் நம் மனத்தில் குடிகொள்ள வேண்டுமானால், நாமும் குற்றமற்ற நெஞ்சினை உடையவனாக இருக்க வேண்டுமென்று எண்ணி



உணர்ந்து மனத்தின் மாசகற்ற முற்படுவதில்லை. அருளுடைச் சுடரே! அளித்தோர் கனியே!! என இறைவனை வாயார வாழ்த்து கிறான். ஆனால் அந்தப் பக்குவமான கனியுருக்கொண்ட இறைவனை மனத்திலிருந்து தன் மனத்தைக் கனியவைக்க வேண்டுமென்பதை உணரவில்லை. அன்பினில் விளைந்த ஆரமுதே என்கின்றான். ஆனால் அந்த அன்பினில் விளைந்த அமுதம் போன்ற ஆண்டவனை அகத்தில் கொண்டு அகத்தை அன்பாக மாற்ற முயல்வதில்லை. அன்பாக மாற்றினால்தான் ஆண்டவனைக் காணமுடியும். ஆண்டவன் அருள் கிட்டும் என்றுணர்ந்து செயலாற்ற முற்படுவதில்லை. இதற்கெல்லாம் காரணம் தாம் செய்வது சரியா தவறா என உணர்ந்து பார்த்த தில்லை. பார்த்தால் பிழை செய்ய அஞ்சுவான். உணர்ந்தவனே உணர்வோடு செயலாற்றுவதைக் கைவிடுகிறான். காரணம் தாம் கடவுள் நெறியைக் கற்றிருக்கிறோம். இறை பூசை செய்கிறோம் என்பதுதான். செய்கிற பிழைகளனைத்துக்கும் பரிகாரமாக இறைவன் பூசை செய்துவிட்டால் போதும் இறைவன் திருவருள் பெறலாம் என்று எண்ணுவது குருட்டுநெறிதான். அச்செய்கை முற்றிலும் தவறு. அன்னார் கருத்து ஆவினை விட்டு எருது கறந்திடச் செல்லும் அறிவிலிக்கொப்பாகும். நெல்லொழிய பதர் கொள்வார் போன்ற பயனைத்தான் அவர்களும் பெறக்கூடும்.

" கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. " (குறள்)

என்றபடி கற்கவேண்டியவைகளை மயக்கமறத் தெளிவாகக் கற்றுக்கொண்டு, கற்றுக்கொண்டதை ஏட்டளவில் இருத்தி விடாது இதயத்திலேயே உணர்ந்து, இறைவனை வணங்குவ தோடு,இறைநெறியும்உணர்ந்துஉள்ளிருத்திப்போற்றி செயலாற்ற வேண்டும் என்று கூறிக்கொண்டிருக்கும்பொழுது, அப்பெரியவர் கூறிய பொன்மொழிகள் அனைத்தையும் ஆமோதிப்பதுபோல் அருகாமையிலுள்ள திருக்கோயிலின் மணியொலித்தது. மணி ஒலியைக் கேட்ட பெரியார், குழந்தாய்! திருக்கோயிலின் மணி ஒலிக்கிறது. இறைவனுக்கு ஆராதனைகள் நடக்கிறது. இறை வனை நினைத்துத் துதிசெய் என என்னிடம் சொல்லி, அவரும் கண்முடி துதிசெய்தார் நானும் அவ்வாறே கண்களை மூடிக் கொண்டு மனத்தை ஒருநிலைப்படுத்தி நல்நெறியை உணர்ந்து

செயலாற்ற அருள் புரியுமாறு இறைவனைத் துதி செய்துகொண்டிருந்தேன். எத்துணைநாழி அவ்வாறுஇருந்தானே தெரியவில்லை. அப்பெரியவரின் குரலொலி பாட்டுருவில் செவி புகுந்தது. கண் விழித்துப் பார்த்தேன். அப் பெரியவரைக் காணவில்லை. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நான்கு திசைகளிலும் பார்த்தேன். காணவில்லை. ஆனல்,

" கருணையிலா வாட்சி கடுகி யொழிக
அருணயந்த சன்மார்க்க ராள்க—தெருணயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்
தெல்லோரும் வாழ்க விசைந்து. " (அருட்பா)

என்ற இசையின் ஒலி மட்டுமே செவிக்கெட்டியது.



---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Velur Sri Vaithinathaswami Devesthanam

Vaithiswarankoil.

This is the second time I visit this temple and it is my privilage. The arrangements inside and around were so good that nothing more can be desired from the management. To them the worshippers owe their gratitude.

(S-d) C. S. Chandrasekara Sastry,
Member, Salestax - Appellate Tribunal,
Madras
24—12—57.

# வலிய ஆட்கொள்ளும் வள்ளல்

மது. ச. விமலானந்தம் பி. ஏ.,
(Student, Post graduate Tamil M. A. Course)
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

மண்ணிலே நாம். விண்ணிலே இறைவன். அவன் உலகேலாம் உணர்ந்தோதற்கு அரியவன்; நிலவுலாவிய நீர்மலி வேணியன்; அலகில் சோதியன், அம்பலத்தாடுவான். அவன் மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குதலே எடுத்த பிறவியின் பயன். கற்றதனாலாய பயனும்கூட. அவனடி சேர்ந்தாரே நிலமிசை நீடுவாழ்வார். அன்னவர்க்கே யாண்டும் இடும்பை இல. அல்லார்க்கு மனக்கவலை மாற்றலரிது. பிறவியாம் பெருங்கடலையும் நீந்துதல் எளிதன்று.

ஊனடைந்த உடம்பின் பிறவியே தானடைந்த உறுதியாம் உலக முதல்வனைச் சாருவதன்றோ ? இதனை மறந்து இவ்வுலக வாழ்வே இன்பவாழ்வென மயங்கி அல்லலுறுவார் சிலர். அல்லலுற்று ஆற்றாது அழுவார் பலர். அலமந்து ஏங்குவார் இன்னும் சிலர். "Nothing but misery sees miracle" என்று ஷேக்ஸ்பியர் கூறுமாப்போல இன்னல் வந்த காலை இறைவனை எண்ணி ஏங்குவதும் உண்டு. பாதி வாழி சென்று, சிலர் தாம் செல்லும் நெறி நன்னெறியன்று என அறிந்து உலகம் நிலை அற்றது எனத்தெளிந்து எல்லாம்வல்ல இறைவனைப் பல்லாண்டு அடைய முயற்சித்துப் பாங்குறுவதுமுண்டு. பிறவியிலேயே சிற்றின்பம் சிறிது, பேரின்பம் பெரியது, தலையாயது, நிலையாயது, எனத் தெளிந்து இறைவனை ஏத்திப் போற்றுவார் இவ்வுலகில் மிகச் சிலரே.

அடியார்கள் இங்ஙனமாக, ஆண்டவன் அருள்தான் என்னே ! அன்பால் சிலரை அகப்படுத்துவான். சிலரை உடல் வருத்தி அதனல் உளம் சிறக்கச் செய்து ஆட்கொள்வான். இன்னும் சிலரை இன்னல் பலதந்து இறுதியிலே பேரின்ப முத்தி கொடுப்பான். பேரன்பும் பெருமதிப்பும் கொண்டாரை அவரது தூய உள்ளம் கண்டு துன்பத்தினின்று தடுத்தாட்கொண்டதும் உண்டு.

இங்ஙனம் கோள்ளுவதும் தள்ளுவதும் எல்லாம் உண்மை, வாய்மை, பொய்ம்மை என்ற மூன்றின் தூய்மையிலே உள்ளது. இதனையே திரிகரண சுத்தி என்பர் வடமொழியாளர். இதயத் தூய்மையும் இறைவனை நாடும் நாட்டமும் இருப்பின், இறைவன் அன்னாரிடம் அன்பு செலுத்துகின்றான். Mans' elevation depends mainly on his mind. It is ideas that elevate men to great heights. Naturally, one who feels a compulsive urge to enter into a higher spiritual leval should safe guard oneself with ideas that bring about an upward orientation in one's being (Introduction to Thirumantram by Thiruvavaduthurai Adhinam) " வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு " " உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் " இதனையே மேலைநாட்டுக் கவிஞன் ஒருவன் கூறுவதும் காண்க :-

Ah ! but a man's reach should exceed his grasp
Or what is heaven for. (Browning)

செயலைவிட சிந்தைக்கே சிறப்புத் தருகின்றான் கவிஞன். பாரதியும் ' உள்ளத்திலே ஒளியுண்டாயின் வாக்கினிலே ஒளி யுண்டாகும் ' என்று தானே கூறுகின்றான்.

ஒன்றிய உள்ளத்திலே தோன்றிய தெய்வநெறிக்கு அருள் புரிகின்றான் இறைவன். அஞ்ஞான இருளகற்றி மெய்ஞ்ஞான ஒளி தந்து இகத்தும் பரத்தும் இன்பமளித்துப் பேரின்ப முத்தி கொடுக்கிறான். மண்ணும் உண்டு. விண்ணும் உண்டு. எனினும் மண்ணிலுள்ளோர் விண்ணை நாடுதல் வேண்டும். மண்ணகத்துக் குறைகள் அனைத்தும் விண்ணிலேதான் நிறை வெய்துகின்றன.

On the earth the broken arcs
In the heaven a perfect round. (Andra Del Sarto)

மண்ணிலுள்ளோர் விண்ணை நாடுங்காலை, விண்ணகத்து இறைவனும் தாழ்ந்துவந்து தயை புரிகின்றான். தன்பால் ஆட்கோள்கின்றான்.



And the emulous heaven yearnd down. made effort
to reach the earth,
As the earth had done her best.......to scale the sky.
(Abt Voglar)

இதனையே எவ்வண்ணம் வேண்டினும் அவ்வண்ணமே ஆட் கோள்ளும் இறைவா என்று சித்தாந்த சாத்திரங்களும் செப்புவது ஈண்டு எண்ணி மகிழ்க.

ஆண்டவன் அருளும் அடியவர் மாண்பும் கண்டோம். ஆண்டவன்பால் நீண்ட காதல் கோண்டு 'அருள்கூர்ந்து எனை ஆட்கோள்க' என்று இறைவனை வேண்டிப் பின்பு தவறித் துன்பவழிச் சென்றாரைத் தடுத்து நிறுத்தி வலிய ஆட்கோள்வது முண்டு. இதனைச் சுந்தரர் செந்தமிழ் விளக்குதல் காண்க

மருவிய தவமும் பெருகிய வளமும் மிக்க பெருந்திருநாடு திருமுனைப்பாடிநாடு. அதன்கண் வாய்மை குன்றாத் திருமறை யவர்கள் நீடும் சிறப்புடையது திருநாவலூர். இப்பதியில், மேம்படு சடையனாருக்கும் ஏதமில் கற்பின் வாழ்க்கைமனை இசைஞானியார்க்கும் மகவாய்த் தீதகன்று உலகம் உய்யத் திரு அவதாரம் செய்தார் நம்பியாரூரர். இவர் ஐம்படை சதங்கை குலுங்க செம்போன் நாண் அரையில் மின்னத் தெருவிலே தேர் உருட்டுநாளில், நரசிங்க முனையர் என்னும் நாடுவாழ் அரசர் பார்த்தார். பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பால் சென்று, விரவிய நண்பினாலே வேண்டி ஆரூரரைப் பெற்றார். பெற்று அன்பினாலே மகன்மை கோண்டார். அருமை ஆரூரரும் பெருமை சால் சிறப்பின் அரசர் தமக்குக் காதற் பிள்ளையாய் விளங்கி நாளொரு மேனியும் பொழுதோரு வண்ணமுமாக வளர்ந்தார். வளர்ந்து, ஆயகலைகள் பலகற்று, அருமறை நூல் பல ஆய்ந்து திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப்பருவம் எய்தினார். மணப்பருவமெய்தவே பெற்ற தந்தையாம் சடையனாரும், சேந்திரு அனைய கன்னியாம் சடங்கவி மறையோன் மகளை மணப்பேண்ணாகத் தேரிந்தேடுத்தார். உற்ற தந்தையாம் கோற்றவர்க்கும் அறிவித்தார். அகமகிழ்ந்தான் அரசனும். நாள் ஓலையும் விடப்பட்டது. நாடும் நற்செய்தி அறிந்து நாவார வாழ்த்திற்று. மணநாள் முன்னாள் காப்பும் கட்டப் பெற்றது.

" மாமறை விதிவழாமல் மணத் துறைக் கடன்கள் ஆற்றித்
தூமறை மூதூர்க் கங்குல் மங்கலந் துவன்றி ஆர்ப்பத்
தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்தான். "

சுந்தரரும் காலைசெய் வினைகள் முடித்து, கணிதநூற் புலவர் சொன்ன வேளை வருமுன்னர் மஞ்சள் நீராடி, மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்தித் தூமலர்ப் பிணையல் சூடி, முப்புரிநூல் மார்பில் மின்ன, நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக்கோலம் கொண்டார்.

மன்னவன் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க நன்னகரும் விழவுகொண்டது. இதனைச் சேக்கிழாரடிகள் ' கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியிற் பொலிந்ததன்றே ' என்றும்,

" நெருங்குதூ ரியங்கள் ஏங்க நிரைத்தசா மரைகள் ஓங்கப்
பெருங்குடை மிடைந்து செல்லப் பிணங்குபூங் கொடிகள் ஆட
அருங்கடி மணம்வந் தெய்த அன்றுதோட் டென்றும் அன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால். "

என்றும் சிறப்பித்து நம்பிக்குவந்தமணம் நன்னகர்க்கே வந்ததாகக் கூறுவது நலமுடைத்து - நயமுடைத்து.

நீலவிதானத்து நித்திலப் பூம்பந்தரிடை அனைவரும் குழுமியிருந்தனர். சங்கம் எங்கும் முழங்க புரவிமீதேறி ஊர் வலம் வந்த செந்தமிழ்ச் சுந்தரரும் வாயில்முன் வந்து இறங்கினர். முரசியம்பின. முழவதிர்ந்தன. முறையெழுந்தன. ஓங்கின சங்கம். ஒலித்தன மறைகள். மணவினை தொடங்கும் தருணம்.

அச்சமயத்து காதார் குழையாட பைம்பூண் கலனுடைப் புண்ணியநுதல் புனிதநீறு பொலிவெய்த, வெண்ணரை முடித்து, சோதிமணி மார்பின் அசை நூலினேடு தள்ளும் நடையிலே தண்டொருகைகொண்டு தள்ளாடி வந்தான் மாமுது மறையோன் ஒருவன். வந்து பந்தரிடை நம்பி எதிர்மன்னு சபை முன்னின்று, ' இந்த மொழிகேண்மின் எதிர்யாவர்களும் ' என்றான் முந்தை மறை ஆயிரம் மொழிந்த திருவாயான். நாவலூரரும் ' நன்று உமது நல்வரவு அந்த மொழி யாதோ ! சொல்வாய் ' என்றார்.



தம்பிரானும்,

" என்னிடையும் நின்னிடையும் நின்ற இசை வால்யான்
முன்னுடைய தோர் பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி " என்றான்.

தம்பிரான்தோழரும்,

" உற்றதோர் வழக்கெனிடை நீயுடைய துண்டேல்
மற்றது முடித்தலதி யான் வதுவை செய்யேன்
முற்ற இது சொல்லு " என்றார்.

தேவரையும் யாவரையும் வேறடிமைகொண்ட எம்மானே ! இந்நாவல் நகர் ஊரன் என் அடிமை. இதுவே நான்மொழிவது, என்றான்.

" .................................அதுகேட்டவர் எம் மருங்கும்
நின்றார் இருந்தார் இவன் என்நினைந் தான்கொல் என்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார் திருநாவ லூரான்
நன்றால் மறையோன் மொழி என்றெதிர் நோக்கி நக்கான்

நக்கான் முகம்நோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்
மிக்கான் மிசையுத் தரியத்துகில் தாங்கி மேற்சென்(று)
அக்கா லம்உந்தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்
இக்கா ரியத்தை நீஇன்று சிரித்ததென் ஏட " என்ன.

அதுகேட்ட நம்பியும் வேதியனை நோக்கி ' ஆசில் அந்தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல் பேச இன்றுன்னைக் கேட்டோம் ' பித்தனோ நீ ஏன் இங்ஙனம் பிதற்றுகின்றனை யென்றார். பித்தனே! பித்தனும் ஆகப்பின் எத்தனை தீங்கு சொன்னாலும் ஆவதொன்றுமில்லை. ' வித்தகம் பேச வேண்டா பணிசெய வேண்டுமென்றான் '. ஆரூரரும் ' உள்ளது ஓலையாயின் உண்மையாய் ஓலைகாட்டென்றார். ஆதியுமந்தமுமில்லான் ' ஓலை காணற்பாலையோ ' என்று கூறிச் செல்ல, வெகுண்டெழுந்த நம்பி மாலும் அயனும் தொடராதானைத் தான் தொடரலுற்றார்.

துணைவனுரைத் தொடர்ந்த தொண்டனார், காவணத்திடையே ஓடி ஆவணத்தைப்பற்றிக் கிழித்தெறிந்தார். முறையிட்டான் முடிவிலாதான். அருமறை அவையோரும் ' உனது ஊரேது பேரேது ' என்று வினவ வெண்ணெய்நல்லூர் என்றான்

வேதியன். நம்பியும், வல்லடி வழக்கன்போலும், வேண்ணெய் நல்லூரராயேல் உன் பிழைநெறி வழக்கை ஆங்கே பேச நீ போவாய் என்ருர்.

இந்த ஊராயினும் பின் எந்த ஊராகினும் சரி, ஆதி ஓலை காட்டிச் சாதிப்பேன் யான் உனை அடிமை என்றே என விரைந்தான் வேதியன் வெண்ணெய்நல்லூர் நோக்கி. அவண் கூடிய அந்தணர் அவையிலே 'நாவலூரான் என் அடிமை. அது செப்பும் ஆவணத்தையும் கிழித்தனன் ஆரூரன்' என்ருன் மொய்த்துவளர் பேரழகு முத்தவடிவோன் (இறைவன்). சிரித்தனர் அவையோர். செப்பினர் இதனையே; 'மறையவர் அடிமையாதல் இம்மாநிலத்திலில்லையே' என்று. தசையெலாம் ஒடுங்க மூத்தான் வழக்கினைச் சாரச்சொன்ஞன். அவனது ஓலை கிழித்தல் ஒல்லுமோ? நுமது முறையிடு யாதோ? என்று மயங்கி நின்ற ஆரூரனை வினவினர் மறையோர். உடனே,

"அனைத்துநூல் உணர்ந்தீர்! ஆதிசைவனேன் றறிவீர்! என்னைத்
தனக்கு வேறடிமை என்றிவ் வந்தணன் சாதித் தானேல்
மனத்தினு லுணர்தற் கெட்டா மாயைஎன் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வோண்ணு தென்றனன் எண்ணம் மிக்கான்"

மறையோரும் மறைமுனியை நோக்கி, 'நும் கூற்றினை சாதிப்பது யாங்ஙனம். ஆட்சியில் ஆவணத்தில் அன்றி, மற்ற அயலார் தம் காட்சியில் மூன்றிலோன்று காட்டுக' என மாயை வல்லானும், முட்சியிற் கிழித்த ஓலை படியோலை, மாட்சியிற் காட்டவைத்தேன் மூலவோலை' என்று கூறி ஓலையை நீட்ட அருள்பெறு கரணத்தானும் அது வாங்கித், தெருள்பெறு சபையோர் கேட்ப,

"அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னே முத்து."

என ஓலையை உரத்திப் படித்தான். ஆசிலா எழுத்தை நோக்கி 'அவை யோக்கும்' என்றனர் மேல் எழுத்திட்டோர். அரசர் தம் அரண் தருகாப்பில் வேறுன்றழைத்து உடன் ஒப்புநோக்கி, 'இரண்டும் ஒத்திருந்ததென்னே! இனிச் செயல் இல்லை. ஏவல் செய்தலே கடன் என்ருர் அவையோர். ஆரூரரும், விதிமுறை இதுவேயாகில் யான் இதற்கிசையேன் என்ன இசையுமோ என்று கூறி நின்ருர்.



அது கண்டிரங்கிய அவையோர், முனிவ! ஆவணம் காட்டும், அவ்வூர் இவ்வூராகில் நுமக்குரிய வருமுறை மனையும் நீடுவாழ்க்கையும் காட்டு என்றனர்.

"பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவர்! என்னை
ஒருவரும் அறியீராகில் போதும் என் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாம் நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார் கண்டிலர் திகைத்து நின்ருர்"

சுந்தரர், எங்கள் நம்பர்தங் கோயில் புக்கதென்கொலோ! என வியந்து பயந்து நிற்க, உமையொருபாகனும்,

"முன்பு நீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூறப்
பின்புநம் ஏவலாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாட்கொண்டோம்"

என்ருர். அதுகேட்ட ஆரூரர், ஈன்ற ஆன்கனைப்புக் கேட்ட கன்று போல் கதறினர், கலங்கினர், விம்மினர், வீழ்ந்தார், எழுந்தார் - தொழுதகைமேலாக 'மன்றுளீர்! செயலோ வந்து வலிய ஆட்கொண்டது' என்ருர்.

ஆர்த்தன முரசம் - அடங்கின எல்லாம். சாலுமொழியால் வழிதடுத்தடிமைகொண்ட ஆண்டவனும், 'வண்மைபேசிய வன்தொண்ட! அன்பிற் சிறந்த அருச்சனைபாட்டே நாம் விரும்புவது; நாளும் வேண்டுவது. ஆதலின் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்ருர். நாடிய மனத்தராம் நம்பியாரூரரும், உருகிய உள்ளமும், பெருகிய கண்ணீருமாய்க் கூப்பிய கையோடுதூ மறை பாடும் வாயானை அஞ்சலி செய்தே,

"வேதியன் ஆகி என்னை வழக்கினல் வெல்லவந்த
ஊதியம் அறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்தேன் சொல்லிப் பாடுகேன் எனமொழிந்தார்"

அன்பனை அருளினல் நோக்கி, அங்கணர், 'முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை (தடுத்தாட்கொண்ட புராணம் - பாடல் 40ல்) ஆதலால் என் பெயர் பித்தன் என்றே பாடுவாய்' என்ருர். கேட்ட சுந்தரர் செந்தமிழ்ப் பாடலுற்ருர். 'பித்தா

பிறைசூடி.........எனத் தொடங்கி எண்ணற்ற ஏடுகளிலே பண்ணார்ந்த பாடல்கள் பல பாடி, பாமாலை சூட்டினார் தம்பிரான் தோழனார். எனவேதான் தன்னேரிலா தனிப்பெரும் சிறப்பும் பெற்றார். அன்று பாடியன இன்றும் சிந்தைக்கு விருந்தாய் செவிக்கோரு இன்பத் தேனாய் நின்று நிலவுகின்றது. இன்றும் இலங்குகிறது! என்றும் இலங்கும்!! எங்கும் துலங்கும்!!!

இங்ஙனம் மண்ணின்மீது துன்புறு வாழ்க்கை நம்பியைத் தொடராது, தான் தொடர்ந்து சுந்தரரை வலிய ஆட்கொண்ட வள்ளல் பெருமானை, நாமும் நம் கள்ளமில் உள்ளத்தில் வைத்து வழிபடுவோமாயின் அவனும் அருள்புரிவான். அனைவரையும் ஆட்கொள்வான். அன்னவன்தாளே அனைவரும் போற்றும் நற்றாள். அதனை ஏத்திப்போற்றி அனைவரும் உய்வோமாக!





# பிரணவ சொரூபம் திருமுறை


திரு. கை. முருகையாப் பிள்ளை B. A., L. T. அவர்கள்

தலைமை ஆசிரியர். ஆதீன கீழைக்கலை உயர்பள்ளி, தருமபுரம்.


பிரணவம் ஓங்காரம். ஓம் என்று சொல்லுதல் ஒலி வடிவாகும். இந்த ஒலி வடிவத்தை அண்டங்கள் அனைத்தும் உண்டாக்கிக்கொண்டு இருக்கின்றன. வெற்றிடம் என்று கூறப்படும் இடத்திலும் இந்த ஒலிப்பு இடைவிடாது இருந்து கொண்டே இருக்கிறது என்பதை விஞ்ஞானிகள்கண்டுள்ளார்கள்.

குழந்தைகள் விடுகின்ற பம்பரம் மிக்கவிரைவாகச் சுழலும் பொழுது உண்டாகும் ஒலி இதை விளக்கும். காற்றாடி சுற்றும் பொழுதும் அந்த ஒலியை நாம் கேட்கிறோம். ஒரு வெறும் குவளையைக் காதில் எடுத்து வைத்தோமானால் ஓம் என்ற ஒலியை நாம் கேட்கிறோம். அதைப்போல் ஒரு சங்கைக் காதில் வைத்தாலும் அந்த ஒலி தெரியவரும்.

ஒலி வடிவாக இருக்கின்றான் இறைவன். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்றார் அப்பர். இப்படிச் சாதாரண சிற்றறிவினால் அறியமுடியாத நாதம் இறைவனிடத்திலிருந்து உண்டாகிறது. முருகனின் புகழைப் பாடுகிற அருணகிரி நாதரும் 'நாதவிந்து கலாதீ நமோநம' என்று நாதம் உண்டாகின்ற மூலப் பொருளை அழைக்கின்றார். அடுத்தபடி வேதமந்திர சொரூபா என்று அழைக்கின்றார். வேதமந்திரங்களும் திருமுறைகளும் ஒலிவடிவானவையே. வேதங்களையும் திருமுறைகளையும் ஓதுதல் வேண்டும். ஓதுதல் இரண்டிற்கும் உரியது. வேதமந்திரங்கள் ஓங்காரத்தினின்றும் பிறந்தவை. அவற்றைப் போலவே திருமுறைகளும்.

முதல் திருமுறையின் முதல் சொற்றொடராகிய 'தோடுடைய செவியன் என்பது, ஓங்காரத்திலேயே ஆரம்பிக்கிறது, 'தோ' என்பதில் 'த்' + ஓ என்ற இரண்டு எழுத்துக்கள் உள்ளன. 'த்' முதலில் இருக்க 'ஓ' என்றதில் திருமுறைகள் பிறக்கின்றன என்று சொல்லுதல் பொருத்தமில்லை என்று எண்ணலாம். ஞானசம்பந்தப்பெருமான் வேதமந்திரங்கள்

எல்லாம் இயற்கையாக வரப்பெற்றவர். அவர் தமிழ் நாட்டிலே அல்லவா பிறந்தார்? தமிழிலே மந்திரங்களை ஓதுதல் வேண்டும்? மந்திரங்களின் சொருபத்தைத் தமிழ் எழுத்துக்களாலே உணர்த்துதல் வேண்டும் என்று மனத்தில் எண்ணினர். அதை முதலிலேயே காண்பிப்பது தமிழ் என்ற சொல்லில் முதலில் இருக்கும் 'த்' + அ. ஆகவே 'த்' என்பதை 'ஓ' என்ற உயிருடன் சேர்த்து 'தோடு' என்று ஆரம்பித்தார். தமிழ் என்ற சொல்லில் 'த்' என்ற மெய் எழுத்தை 'ஓ' என்ற உயிருடன்சேர்க்க 'தோ' என்பது உண்டாகிறது. ஆகவே முதல் திருமுறையாகிய ஞானசம்பந்தப் பெருமானுடைய பாடல் 'தோ' என்று ஆரம்பிக்கிறது. திருமுறைகள் 12. 12 ஆவது திருமுறை பெரிய புராணம். அது தோடக்கத்திலும், முடிவிலும் உலகேலாம் என்று கோண்டுளது. 'ஓ' என்று தோடங்கி 'ம்' என்று முடிந்து பிரணவம் எல்லா உலகிற்கும் போதுவில் உரியது என்பதை உணர்த்துகிறது.

வேதமந்திரங்களுக்கெல்லாம் மூலமந்திரம் பிரணவம். அது ஒலிவடிவாகவே உள்ளது. அதற்குள் திருமுறைகளும் அடங்கியுள்ளன என்பது இன்னும் சற்று விளக்கமாகக் கூறப்பட வேண்டும். திருமுறைகள் யாவும் மந்திரங்களே. வேதமந்திரங்களினாலே இறைவனை அருச்சிப்பது போலத் திருமுறைகளையும் ஓதினால் இறைவனை அருச்சித்தலாகும். சமயகுரவர்கள் நால்வரும் இறைவனை அருச்சித்த முறைகள் திருமுறைகளாக எழுந்தன.

திருமுறைகளை ஓதினால் உலகில் நாம் விரும்பிய காரியங்கள் கைகூடும். திருநீற்றுப்பதிகத்தை ஓதி ஞானசம்பந்தர் பிணியைத் தீர்த்தார். நம்முடைய பிணியையும் தீர்த்துக் கோள்ள அது உதவுகிறது. ஞானசம்பந்தப் பெருமான் பதிகத்தை ஓதித் திருநீற்றைப் பாண்டியன் உடலில் தடவியதும் அவனது பிணி நீங்கிற்று. நாமும் பிணி வந்த காலத்தில் பதிகத்தை ஓதித்திருநீற்றைத் தரித்தல் வேண்டும். 'சடையாய் எனுமால்' என்ற பதிகம் விஷம்தீண்டி இறந்தவரை எழுப்பியது. நேருப்பில் இட்ட ஏட்டைப் பசுமையாக மிளிரச் செய்தது திருமுறை. முதலையுண்ட பாலனை அழைத்தது திருமுறை. தீராநோய் தீர்க்கவந்தது. எலும்பைப் பேண் உருவமாக ஆக்கியது. உயிர்கள் விரும்பும் போருளைக்கோடுக்க வல்லது திருமுறை.



இக்காரணம் பற்றியே திருமுறைகள் கோவில்களில் ஓதப் பெறுகின்றன. ஒலி வடிவாக இருக்கும் இறைவனைத் திருமுறைகளாலே பாடுகின்றபொழுது பாட்டு ஒலி, பண்ணொலி, தாள ஒலி இவை மூன்றும் சேர்ந்து இறைவனது ஒலிவடிவில் கலக்கின்றன.

அணுக்கள் சிதைந்து விரைவில் வெளிப்படும்பொழுது ஒலி உண்டாகின்றது. திருமுறைகள் பாடும்பொழுது எழுகின்ற ஒலிகள் நமது உடலில் உள்ள ஒலி அணுக்கற்றைகளின் சிதைவே ஆகும். அப்படி இறைவனுடைய புகழைப் பாடுவதற்கு நமது உடலை அற்பணித்தல் மிகவும் நல்லது. அதுவே நாம் பிறவி எடுத்தற்குப் பயனாகும்: ஆகவேதான் அப்பரும் அவனது புகழைப் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்றார். திருமுறைகளை ஓதுதல் ஓங்கார மந்திரத்தை ஓதுதலாகும்; இறைவனை அருச்சித்தலும் ஆகும்.

திருமுறைகள் யாவும் இறைவனது புகழையே சொல்லுகின்றன. அவைகளை ஓதும்பொழுது மிக அழகாக ஓதுதல் வேண்டும். சொற்சிதைவு, சொற்குறைவு, சொற்சோர்வு இவை இருக்கக்கூடாது. இறைவன்பால் அன்பு கோண்டு மிக அழகாகத் திருமுறைகளை ஓதினால் இறைவனது அருட்கடலில் திளைக்கலாம். இதனையே ஒரு ஜர்மன் மகாகவி (Goethe) கேத்தே என்பவர் living in the beautiful, living in the good and living in the whole என்னும் மூன்று படியாக வாழ்வதாகக் குறித்தார்.

---

### தனிச் செய்யுள்

காமன் றந்தை காசிபனுங் காலன் றந்தை வேதியனும்
ஏமன் றந்தை யிந்திரனும் இராவணன் றந்தை யத்திரியாம்,
வீமன் றந்தை மாயவனும் வேடன் தந்தை விடையவனும்.
பூமன் றந்தை பரதனும் புலவ ரிதனைப் புகன்றாரே. **30**

கயிலையி லுறுவோ னற்சோற் கந்தனை யளித்தோன் மிக்க
சயிலவில் லுடையோன் சத்தி தங்குகை யுள்ள மெய்யோன்
வயமயி லூரத் தன்சே வலங்கோடி யாள னுறு
வியனுறு முகவன் பாதம் விருப்புகார் கருப்பு காரே. **31**

# செய்திகள்

## ஆதீனத்தில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ குருஞான சம்பந்தர் ஆலயத்தில் ஸ்ரீ குருஞானசம்பந்தருக்கு, நிகழும் துன்முகி ஆண்டு பங்குனித்திங்கள் 1-ஆம் நாள் ஏகதின லக்ஷார்ச்சனை காலை முதல் தொடங்கி நடைபெற்றது. இரவு அருச்சனை பூர்த்தி யாயிற்று. விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் வழிபாட்டிற்கு எழுந்தருளி வழிபாடாற்றியருளினுர்கள். மக்கள் பலர் வந்து கண்டு, வணங்கி மகிழ்ந்தனர்.

## கல்வி நிலையக் கழகங்களின் ஆண்டு விழா

நிகழும் துன்முகி ஆண்டு பங்குனித்திங்கள் 10-ஆம் நாள் (23—3—57) சனிக்கிழமை மாலை 5 மணிக்குத் தருமை ஆதீனப் பல்கலைக்கல்லூரி, ஸ்ரீ குருஞானசம்பந்தர் கழகம் முதலிய கல்வி நிலையக் கழகங்களின் ஆண்டு விழா, திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் நிகழ்ந்தது. மன்றம் தோரணங்களால் அழகு செய்யப் பெற்றிருந்தது. விழா இறைவணக்கத்துடன் தொடங்கப்பெற்றது.

ஆண்டு விழாவிற்கு நாகர்கோவில், இந்து கல்லூரி முதல்வர் பேராசிரியர், டாக்டர், உயர்திரு, பா. நடராசன் M. A., D. Litt. அவர்கள் தலைமைத் தாங்கினுர்கள். விழாத் தலைவர், பேச்சாளர் முதலியவர்களை ஆதீனப்பல்கலைக் கல்லூரி பிரின்ஸிபால், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் வரவேற்றுப்பேசி. தலைவருக்கு வரவேற்பிதழ் ஒன்று வாசித்தளித்தார்கள், ஸ்ரீ காசி மடம், ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களாலும், மற்றவர்களாலும், அனுப்பப்பெற்ற வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப் பெற்றன.

ஆதீனக் கல்வி நிலையக் கழகங்களின் ஆண்டு அறிக்கைகள் படிக்கப்பெற்றன. பிறகு தலைவர் தமது தலைமையுரையில் பேசிய தாவது :-

குருமகாசந்நிதானம் பல அறங்களைப் புரிந்துவருவதற்கு இக் கல்வி நிலையங்களே தக்க சான்ருக விளங்குகின்றன. மடாலயங் கள் தூங்கிக்கொண்டிருப்பவை என்ற போய் எண்ணத்தை-போடீ யுரையைப் போய்யாக்க இம்மாதிரியான அறநிலையங்கள் மிகவும்



வேண்டப்படுவதேயாகும். வளனுற வாழ்த்துகிறேன். நமது சமயமும், தமிழும் மிகமிகப் பழமையானவை. 5000 ஆண்டு களுக்கு முன்பே இவை வளர்ச்சியுற்றிருந்தன என்று புதை போருள் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சைவம் உயிர், தமிழ் உடல். அநாதிகாலந்தோட்டே இவை இருகண்களாக ஒளிவிட்டு விளங்கியுள்ளன.

மடங்கள் :- தஞ்சை மாவட்டத்திலே நான் பிறக்கும் பேறு பெறவில்லையே என்று போருமைப்படுகிறேன். இங்கே மூன்று மடங்கள் திகழ்கின்றன. தமிழர் கோள்கையில் 'மூன்று' என்பது மிக முக்கியமாகக் கருதப்படுவதோன்ருகும். உலகம், கண், மலம், மூர்த்தி, பதிபசுபாசம் எல்லாம் மூன்ருகவே அமைந்தது போன்றே சைவ மடங்களும் இம் மாவட்டத்திலே அமைந்துள்ளமை ஒரு சிறப்பாகும். சிறந்த புலவர்கள், சமயிகள் இங்கே இருக் கின்றனர். நாம் சிறப்பாக ஒன்றைக் கருத்தில் இருத்திக்கோள்ள வேண்டும். என்ன ? 'அன்பே சிவம்'. இது, திருமூலரின் மூல வாக்கு; மூலக்கோள்கை ! இவ்வுண்மையை, அவ்வச் சமயங்கள் மேற்கோள்ளுமாயின் அவை சிறப்பெய்தும் என்பதில் ஐயமில்லை. என் பரம்பரையே சமயத்தைத் தழுவி மடங்களுடன் தோடர்பு கோண்டு விளங்கியதாகும் என்பதை நான் மறக்கமுடியாது. இந்த முறையில் இவ்வாதீனம், எங்களுக்குக் குருபரம்பரையாக உள்ளது. இவ்வாதீனம் காலத்திற்கேற்ப நலங்கள் பல ஆற்றி வருகின்றது என்பதைக் கூற மகிழ்வுறுகிறேன்.

மாணவர்கட்கு :- ஐந்து நிலையங்கள் சேர்ந்து கோண்டாடும் இவ்விழா மாணவர்களின் ஒழுக்கத்தைக் காட்டுகிறது. வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படுகின்றன. இவ்வாய்மொழியின் உண்மையை வேறு எந்நாட்டாரும் கூறவில்லை. எங்கள் கல்லூரியிலேயும் நாளும் அரைமணி நேரம் ஒழுக்கம், பக்தி ஆகியன போதிக்கப்படுகின்றன. தேர்விலே வேற்றி, தோல்வி என்பதைவிட, பண்பாடுடையவர்களாக வாழ வழி வகுப்பதே சிறந்ததாகும். கட்டுப்பாட்டுடன் வாழுங்கள். நாட்டின் உயிர்நாடி மாணவர்கள் என்பதைக் கூற ஆசைப்படு கிறேன். மாணவர்கள் வாழ்வு மலரட்டும் என வாழ்த்துகிறேன்.

நாகர்கோவில் இந்து கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், வித்துவான் திரு. C. இலக்குவனுர் அவர்களும் விழாவில் கலந்து கோண்டு அரியதோரு சோற்பெருக்காற்றுகையில் கூறியது :-

மாணவர்களே ! நீங்கள் பழந்தமிழ்ச் சமயமாகிய சைவத்தை உங்கள் முதன்மை குறிக்கோளாகப் போற்றுங்கள் ! வாழ்க்கையின்

நெறியாகக் கொள்ளுங்கள். மற்ற மதத்தாரிடமும் அன்பு காட்டுங்கள் ! உண்மையான - எல்லோருக்கும் ஒத்த சமயத்தைக் கடைப்பிடியுங்கள் ! நல்லதொரு மொழியை, இனத்தை, சமயத்தைப் பின்பற்றி வாழத் தலைபடுங்கள் ! திருக்குறள் வாழ்க்கை சிறந்த சமய வாழ்க்கையாகும். அப்பர், சம்பந்தர், சுந்தரர் வாழ்க்கை சிறந்ததாகும். நமது சமயம் உலகெலாம் பரவ, குருமகாசந்நிதானத்தின் வாழ்த்தினைப் பெற்றுத் தொண்டாற்றுவீர்களாக !

காஞ்சிபுரம் பச்சையப்பர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் உயர்திரு. ந. சஞ்சீவி M. A., அவர்கள் "சிலம்பு" என்னும் தலைப்பில் பேசியது :-

இந்த விழாவிலே, ஒரு தமிழ் வாழ்க்கையைப்பற்றிப் பேசுவது பெருமையளிக்கக்கூடியதாகும். விஞ்ஞானம், கணக்கு நூல்களை விட நாகரிகத்திலும், எளிமையிலும், நிலம், வாழ்வு, மொழி இவற்றிலும் தமிழ்கண்ட உண்மையைக் கூறுவது சிலப்பதிகாரம் ஆகும். இது ஒரு வரலாற்று நூல். தேசிய காவியம். நாட்டின் எல்லை, இனம், பண்பு கலாசாரம், சமயம் இவைகளின் உண்மைகளை மிகப் பழங்காலத்தின் தொடர்புடனே வைத்துக்கூறுவது இவ்வரிய செந்தமிழ்க் காவியமாகும். பழங்காலப் புலவர்கள் தமிழ் வண்ணச் சோலையிலிருந்து தனித்தனிப் பாமலரைப் பறித்து தமிழ்த் தாயின் திருவடிக்குத் தந்து சென்றுர்கள். ஆனுல், தமிழ்த் தாயின் மணியாரமாக விளங்கவேண்டுமென்று இளங்கோ அடிகள் இத் தொடரினைச் சாத்தி மகிழ்ந்தார். "நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் ஓர் மணி யாரமே". பாரதியார் மூன்று புலவர்களைப் போற்றிக் கூறும் பொழுது, கம்பன் தமிழ்நாட்டின் தகுதி, சக்தி இவற்றையும்; வள்ளுவர் அறம், ஒழுக்கம் இவற்றையும்; இளங்கோ நாகரிகம், உரிமை இவற்றையும் வலியுறுத்தியதை அவர்களைப் பாராட்டும் பாடல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

முத்தமிழ் :- இயல், இசை, நாடகம் ஆகிய இவற்றின் முழு உருவத்தைக் காட்டுவது சிலம்பு. இராமாயணம், உதயணன் கதை போல அன்றி, இது தமிழ்நாட்டுக் குடிமகனின் வரலாற்றை விளக்குவதாகும். பெரும் மன்னர்களை யெல்லாம் தன்னிடத்தே கொண்டு விளங்கினும், சாதாரண ஒரு சிலம்பின் கதையாகவே இருந்து இவ்வளவு சிறப்புப்பெற்றுள்ளது என்பது வியப்புக் குரியதே. இதன் விழா, கடல் கடந்துள்ள மன்னர்களாலும் கொண்டாடப்பட்டது. எனின் வேறு என்ன கூற இருக்கிறது ! சேரமாதேவி கண்ணகியை வழிபடவேண்டினுள். ஒரு சிறிய சிலம்பு பெரிய இமயமலையும் ஏறிற்று என்ற பெருமை தமிழ்



நாட்டுக்கே - தமிழர்களுக்கே உரியது. யாழ்நூலும், நாடகநூலுமாக சிலப்பதிகாரம் மிளிர்கின்றது. திரை, விளக்கு அமைப்புக்களை விளக்குகிறது. இன்றைய சினிமா இதனிடம் நெருங்க முடியாதே சிலப்பதிகாரத்திலே சமயங்கள் ஒளிவிடுகின்றன. சைவச் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. கற்புத் தெய்வத்தைக் கருதி எழுந்தது. வாழ்க சிலம்பு ! வாழ்க தமிழ் !

ஆதீனப் பல்கலைக் கல்லூரியில் கவிதைப்போட்டி, கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டி முதலியன நிகழ்த்தப் பெற்றன. அவைகளில் முதல் தகுதி, இரண்டாம் தகுதி பெற்ற மாணவர்களுக்கும், ஆதீனக் கீழைக்கலை உயர்நிலைப் பள்ளியில் நிகழ்ந்த ஒப்பித்தல் போட்டி, பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, உடற்பயிற்சிப் போட்டி முதலிய போட்டிகளில் கலந்துகொண்டு முதல் தகுதி, இரண்டாம் தகுதி பெற்ற மாணவர்களுக்கும், திரு. S. சஞ்சீவி நாயுடு B. A., அவர்கள் Deputy superintendent of Police, Mayuram. பரிசுகளை வழங்கினுர்கள். பரிசு வழங்கி வெற்றிபெற்றவர்களைப் பாராட்டியும், தோல்வியுற்றவர்கள் மனத்தில் தளர்ச்சியுருது மேலும் முயற்சி செய்து முதன்மைபெற வேண்டும் என்றும் கூறினுர்கள்.

கீழைக்கலை உயர்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. கை. முருகையாப் பிள்ளை B. A., L. T., அவர்கள் நன்றி கூறியபின் இறைவணக்கத்துடன் விழா நிறைவெய்தியது.

## வேளூரில்

### பங்குனி உத்திர விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ தையல்நாயகி சமேத ஸ்ரீ வைத்தியநாசுவாமி ஆலயத்தில் பங்குனி உத்திரத் திருவிழா 7—3—57 வியாழக்கிழமை முதல் தொடங்கி மிக்க சிறப்போடு நடைபெற்றது. விழா நாட்களில் ஒவ்வொரு நாளும் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. சிறப்புவிழா நாட்களில் இசை விருந்தும் நிகழ்த்தப் பெற்றன.

### சொற்பொழிவுகளும், இன்னிசையும்

8—3—57 வெள்ளிக்கிழமையன்று திரு. கோ. சிவஞானம், தருமபுர ஆதீனத் தொண்டர், திருக்கருகாவூர். "அப்பூதியடிகள்"

என்ற பொருளிலும், வித்துவான் திரு. ம. சிவசம்பு, ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம். "எனை ஆண்ட அத்தன்" என்ற பொருளிலும் பேசினார்கள்.

9—3—57 சனிக்கிழமையன்று தருமை ஆதீனப் புலவர், சித்தாந்த சிரோமணி, திரு. க. வச்சிரவேலு முதலியார் B.A., L.T., ஆசிரியர், பச்சையப்பன் உயர்பள்ளி, காஞ்சீபுரம், "நம்பியாண்டார் நம்பிகள்" என்ற தலைப்பிலும், வித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம். "திருமுருகாற்றுப்படை" என்ற தலைப்பிலும், சம்ஸ்கிருத, விசாரத, ஸ்ரீ C. S. சச்சிதானந்த தீக்ஷிதர், சிதம்பரம், "நடராஜ பரத்துவம்" என்ற தலைப்பிலும் பேசினார்கள.

அன்று இரவு 8 மணிக்குமேல் கும்பகோணம் திரு. T. P. கைலாசம் குழுவினரால் ஓர் இன்னிசை விருந்து நிகழ்த்தப்பெற்றது.

## திருமுறைவிழா

10—3—57 ஞாயிற்றுக்கிழமையன்று தேவார வகுப்பு ஆண்டு விழாவும், திருமுறை விழாவும் நடைபெற்றன. காலையில், இன்னிசை வாணர்கள் திருமுறைப் பாராயணத்தோடு திருமுறைகளை யானைமேல் ஏற்றி அலங்கரித்து திருவீதிவலமாகக்கொண்டு வரப்பெற்றன. தேவார வகுப்பு மாணவர்களுள் நல்லமுறையில் பாடும் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. மாலை 6-மணிக்குத் திருமுறை விழாச்சொற்பொழிவுகள் தொடங்கப் பெற்றன.

வித்துவான், திரு. ஜி. சுப்பிரமணியப் பிள்ளை M. A., B. L., தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், "பாலூட்டும் பாடல்" என்ற பொருளிலும், வித்துவான், திரு. சோ. சிங்காரவேலனார், ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம், 'தடுத்தாட்கொண்ட பாடல் என்ற பொருளிலும், வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆராய்ச்சிப் புலவர், "பண்சுமந்த பாடல்" என்ற பொருளிலும், தருமை ஆதீன வித்துவான் சித்தாந்த சிரோமணி, சித்தாந்த ரத்நாகரம், முதுபெரும்புலவர், மதுரகவி, திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், ஆதீனப் பல்கலைக் கல்லூரி பிரின்ஸிபால், தருமபுரம். "சித்தத்துள் தித்திக்கும் பாடல்" என்ற பொருளிலும், திரு. ஆர். வேலாயுத ஓதுவார், தேவார பாடசாலை ஆசிரியர், தருமை ஆதீனம்,



"மன்றுளார் அடியார் வான்புகழ்ப் பாடல்" என்ற பொருளிலும், வித்துவான், திரு. க. வெள்ளைவாரணனார், தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், "திருமுறைச் சிறப்பு" என்ற தலைப்பிலும் பேசினார்கள்.

11—3—57 திங்கட்கிழமையன்று, தருமை ஆதீனப் புலவர், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான், வித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர், தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம். "திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்" என்ற பொருளிலும், தருமை ஆதீனப் புலவர், வித்துவான், திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை, தமிழ் விரிவுரையாளர், அரசர் கல்லூரி, திருவையாறு "முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்" என்ற பொருளிலும் பேசினார்கள்.

இரவு 8-மணிமுதல் ஸ்ரீவாஞ்சியம், திரு. K. இராமச்சந்திர அய்யர் குழுவினரால் இன்னிசை விருந்து நிகழ்த்தப்பெற்றது.

12—3—57 செவ்வாய்க்கிழமையன்று வித்துவான். திரு. வி. சா. குருசாமி, ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம். "திருப்பூவணநாதர்' உலா" என்ற தலைப்பில் பேசினார்கள்.

இரவு 8-மணிமுதல் திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி வித்வலயமணி, திரு. R. சண்முகசுந்தரம் பிள்ளை வீணைக்கச்சேரி நிகழ்ந்தது.

16-3-57 சனிக்கிழமையன்று வித்துவான், திரு. சே. வேங்கடராமச் செட்டியார், தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், "திருக்கோவையார்" என்ற பொருளிலும், வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L., பிரின்ஸிபால், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள். "கோயிற் பயன்' என்ற தலைப்பிலும், பேசினார்கள்.

இரவு 8-மணி முதல் இன்னிசை விருந்து நடைபெற்றது. மயிலம், திரு. P. வச்சிரவேலு முதலியார் பாட்டு. கும்பகோணம், திரு. T. S. சம்பந்தம் பிள்ளை பிடில். குத்தாலம், திரு. R. விசுவநாத அய்யர் மிருதங்கம். சொற்பொழிவுகளையும், இன்னிசையையும் கேட்டு மகிழ்ந்தனர் மக்கள்.

## இந்து அனாதைக் குழந்தைகள் விடுதி ஆண்டுவிழா

வைத்தீசுவரன் கோயில், தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த தேவஸ்தானங்களின், இந்து அனாதைக்குழந்தைகள் விடுதி ஆண்டு விழா 23—3—57 சனிக்கிழமை இரவு 7-மணிக்குக் கொண்டாடப் பெற்றது. விழா, நாகர்கோயில், இந்துக் கல்லூரித் தலைவர் டாக்டர், திரு. பா. நடராசன் M. A. D. Litt. அவர்கள் சீரிய தலைமையில் நடைபெற்றது. சீகாழி சியாமளா அண்ணி பெண்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி வீ. பாபு B. A., B. T. அவர்கள் சிறந்த சொற்பெருக்காற்றி விடுதி மாணவர்களுக்குப் பரிசும் வழங்கினார்கள்.

வேளூர், ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம் கட்டளை விசாரணை ஸ்ரீமத் சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள் B. A., B. L., அவர்கள், தலைவர் முதலியவர்களை வரவேற்றும், நன்றியுரை கூறியும் விழாவை உடனிருந்து நடத்திவைத்தார்கள்.

அன்று இரவு விடுதிக்குழந்தைகளால் "காரைக்கால் அம்மையார்" என்ற நாடகம் நடிக்கப்பெற்றது. நாடகத்திற்கு மக்கள் திரளாக வந்து கண்டுகளித்தனர். குழந்தைகள் சிறந்த முறையில் நடித்தார்கள். அக்குழந்தைகளை நடிக்கச்செய்த தேவஸ்தானம் திரு. சொக்கலிங்க ஓதுவார் அவர்கள்முயற்சி பாராட்டற்குரியது. நாடகத்தை நல்லமுறையில் குழந்தைகள் நடித்ததற்கு அவர்களை, ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. சோ சிங்காரவேலனார் அவர்கள் பாராட்டிப்பேசி சிறந்த முறையில் நடித்த பாலாம்பாள் என்ற குழந்தைக்குப் பரிசும் வழங்கினார்கள்.

### திருபுவனத்தில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் உருத்திரபாதத் திருநாள் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி அம்பாள் சமேத ஸ்ரீ கம்பகரேசுவர சுவமிக்கு, நிகழும் துன்முகி ஆண்டு மாசி மாதம் 24-ஆம் தேதி (7—3—57) முதல் பங்குனி மாதம் 3-ஆம் தேதி (16—3—57) முடிய மிக்க சிறப்போடு நடைபெற்றது. மக்கள் பலர் கண்டு களித்தனர். விழாக்களில் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இன்னிசை விருந்தும் நிகழ்ந்தது.



பங்குனி உத்திரவிழாச் சொற்பொழிவுகள் :— ஒவ்வொரு நாளும் மாலை 6-மணிக்குத் தொடங்கப்பெற்றன. 7-3-57 வியாழக்கிழமை வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர், ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம் "மறுமலர்ச்சி". திரு. கோ. சிவஞானம், தருமபுர ஆதீனத் தொண்டர், திருக்கருகாவூர். "கண்ணப்பர் அன்பு". 8—3—57 வெள்ளிக்கிழமை வித்துவான், திரு. வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சிப் புலவர், அண்ணாமலைநகர். "அப்பர் அருந்தமிழ்". 10—3—57 ஞாயிற்றுக்கிழமை வித்துவான், திரு. ம. சிவசம்பு, ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம். "சேரமான் பெருமாள்". 11—3—57 திங்கட்கிழமை வித்துவான், திரு. வை. கல்யாணசுந்தரம், ஆதீன ஒரியண்டல் உயர்பள்ளித் தமிழாசிரியர், தருமபுரம். "திருநீலகண்டர்" 12—3—57 செவ்வாய்க்கிழமை வித்துவான், திரு. கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L. பிரின்ஸிபால், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள். "மன்னர் திருப்பணிகள்".

இன்னிசை விருந்து இரவு 8 மணி முதல் நடைபெற்றது. வில்லியநல்லூர் திரு. V. இராமநாதன் பாட்டு, கும்பகோணம் திரு. T. S. சம்பந்தம் பிள்ளை பிடில், குத்தாலம் R. விசுவநாத அய்யர் மிருதங்கம்.

13—3—57 புதன்கிழமை வித்துவான், திரு. ஆ. இராசதுரை, ஆதீன ஒரியண்டல் உயர்பள்ளித் தமிழாசிரியர், தருமபுரம். "அமர்நீதி நாயனார்". வித்துவான், திரு. சா. ஞானப்பிரகாசம், ஆதீன ஒரியண்டல் உயர்பள்ளித் தமிழாசிரியர், தருமபுரம். "காரைக்கால் அம்மையார்". 14—3—57 வியாழக்கிழமை திரு. கை. முருகையாப் பிள்ளை B. A., L. T. ஆதீன ஒரியண்டல் உயர்பள்ளித் தலைமை ஆசிரியர், தருமபுரம். "நேச நாயனார்". வித்துவான், திரு. போன். முருகையனார், தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, "பண்டைத் தமிழும் சிவநெறியும்". 15—3—57 வெள்ளிக்கிழமை திரு. ஆர். வேலாயுத ஓதுவார், தேவார ஆசிரியர், தருமை ஆதீனம். "சிவபூஜைப் பயன்" 16—3—57 சனிக்கிழமை வித்துவான், திரு. மு. நடராஜ தேசிகர், திருவிடைமருதூர். "ஆதிசீர்பரவும் வாதவூரண்ணல்".

17—3—57 ஞாயிற்றுக்கிழமை திருமுறை விழாவும், தேவார வகுப்பு ஆண்டு விழாவும் நடைபெற்றன. மாலை 4-30 மணிக்குத் தொடங்கப்பெற்றன. வித்துவான், திரு. ஜி. சுப்பிரமணியப் பிள்ளை M. A., B. L., தமிழ் ஆராய்ச்சிதுறைத் தலைவர்,

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் அண்ணுமலைநகர். "ஆளுடைய பிள்ளையார்". தருமை ஆதீன வித்துவான், சித்தாந்த சிரோமணி, சித்தாந்த ரத்நாகரம், முதுபெரும் புலவர், மதுரகவி, முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், ஆதீனப் பல்கலைக் கல்லூரி பிரின்ஸிபால், தருமபுரம். "ஆளுடைய அரசு" வித்துவான், திரு. சோ. சிங்காரவேலனுர். ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம். "ஆளுடைய நம்பி". வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார், ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம். "ஆளுடைய அடிகள்". பண்ணிசை வாணர்கள் பாராயணத்தோடு திருமுறைகள் யானைமேல் அலங்கரித்து திருவீதி வலமாகக் கோணரப்பெற்றன.

## பேரளத்தில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானத்தில் பங்குனி உத்திரத் திருவிழா, 7—3—57 முதல் தொடங்கி 16—3—57 முடிய உள்ள நாட்களில் மிக்க சிறப்போடு நடைபெற்றது. மக்கள் பலர் கண்டு உய்ந்தனர். பங்குனி உத்திரவிழாவை முன்னிட்டு சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

### சொற்பொழிவுகள்

9—3—57 சனிக்கிழமையன்று மாலை 6 மணிக்குத் தருமை ஆதீனப்புலவர், வித்துவான், திரு. வை. மு. சண்முக தேசிகர் அவர்கள். (தமிழாசிரியர். நேஷனல் ஹைஸ்கூல், நாகை) "திருநீலகண்டர்" என்னும் பொருளிலும், 10—3—57 ஞாயிற்றுக் கிழமையன்று மாலை 6 மணிக்கு வித்துவான், திரு. மு. நடராஜ தேசிகர் அவர்கள் (தமிழாசிரியர், துறைசை ஆதீனம் ஹைஸ்கூல், திருவிடைமருதூர்). "திருநாவுக்கரசர்" என்னும் பொருளிலும் பேசினுர்கள்.



# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம், பிரம்ஸ்ரீ. கே. முத்துஜோதிடர் அவர்கள், திருவிடைமருதூர்.

(துன்முகி௵ பங்குனிமீ 30௳யோடு அப்தம்பூர்த்தியாகியது. மங்களமான ஹேவிளம்பி௵. சித்திரைமீ 1௳ முதல் 31௳ முடிய (13-4-57 முதல் 13-5-57 முடிய)

மங்களகரமான ஹேவிளம்பி௵ சித்திரைமீ ஸ்திரவாரம் ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி 15 நாழிகை 31 விஞடியளவில் கடக லக்னத்தில் அபிஜிந் முகூர்த்தத்தில் சூரியனுக்குப் பலமுள்ள மத்தியந்தின வேளையில் சூரியனுடைய நக்ஷத்திரத்தில் அஜராசியில் வருஷப் பிரவேசம் ஆரம்பமாகி ஸ்ரீ சூரியபகவான் சகலலோகத்துக்கும் நித்யமங்களத்தையும் தனதான்ய விருத்திகளையும், உலக சாந்தியையும், தந்து சகல ஜீவாத்மாக்களும் சந்தோஷமாய் வாழ அருள் புரிவாராக.

### 1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் சுப சந்தோஷத்தையும் சன்மார்க்கத்தையும் உண்டுபண்ணும். அசுவதி 2, 3. பரணி 2, 3, கார்த்திகை 1 பாதங்கள் உடையவர்களுக்கு மாதக்கடைசியில் பத்து தினங்கள் சுபமிராது. அதிகமான கஷ்ட நஷ்டங்களும், அகங்கார மமகாரங்களும் அதிகரித்துப் பலவித சிரமங்களைக் கொடுக்கும். சிவசிந்தனையாளர்கள் நலமடைவார்கள். புதன் வெள்ளி சுபமாகும்.

### 2. விருஷபம். கார்த்திகை ¾, ரோஹிணி - மிருகசீரிஷம் ½

கார்த்திகை 2, 3, 4 பாதங்கள் தூரப் பிரயாணத்தையும், அதிக செலவினங்களையும் தரும். ரோஹிணி நான்கு பாதங்களும் வியாதி பீடையாலும், தொழில் மூலமாயும் சதா சிரமப்படுத்தும். மிருகசீர்ஷம் 1, 2 பாதங்கள் குடும்ப கலகத்தையும், விவசாய நஷ்டத்தையும், சதா மனகிலேசத்தையும் தந்து இல்லற சுகத்தைத் தடுக்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

3. மிதுனம். மிருகசீரிஷம் $\frac{1}{2}$, திருவாதிரை - புனர்பூசம் $\frac{3}{4}$

மிருகசீர்ஷம் 3, 4 பாதங்கள் சுபத்தைத்தரும். பந்துமித்திர கலியாண வைபவங்களும், சதாசஞ்சாரமும் தரும். தொழில் ஓங்கும். திருவாதிரை நான்குபாதங்களும் சுபம் தரும். இடம் மாறி தொழில் ஓங்கும். பெரியோர் அன்பு கிட்டும். புனர்பூசம் முதல் பாதம் சுபமாகும். புனர்பூசம் 2 3 பாதங்கள் அதிக பயத்தையும், ரோக விருத்தியையும், குடும்ப கலகத்தையும், தன நஷ்டங்களையும் உண்டுபண்ணும். சனி, செவ்வாய் சுபமாகும்.

4. கடகம். புனர்பூசம் $\frac{1}{4}$, பூசம் - ஆயில்யம்

கடகராசி 9 பாதங்களும், ஜயத்தையும், லாபத்தையும் தந்து மனம் சந்தோஷமடையச் செய்யும். பூசம் நான்கு பாதங்கள் மாதக்கடைசியில் குடும்ப கஷ்டங்களையும் கடன் தொல்லைகளையும் தொழில் கஷ்டங்களையும், ராஜாங்க நிர்ப்பந்தங் களையும் உண்டுபண்ணும். சனி செவ்வாய் சுபமாகும்.

5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் $\frac{1}{4}$

மகம் நான்கு பாதங்களும் சுபமாகும். உத்தியோக மேன்மை தரும். வியாபாரிகள் லாப மடைவார்கள். விவசாயிகள் ஓங்குவார்கள். பூரம் நான்கு பாதங்களும் சஞ்சாரத்தில் லாபம் ஏற்படும். நூதனமான கூட்டுத்தொழில் ஏற்பட்டு நன்மதிப்பு உண்டாகும். உத்திரம் முதல் பாதம் தூர பிரயாணத்தைத் தரும். வெகுநாளாக எதிர்பார்த்து நடவாத சிக்கலான பெரிய காரியங்களெல்லாம் சுலபமாக சாதிக்க நேரும். எங்கும் உண்மையும் அன்பும்மிக்க நண்பர்கள் ஏற்படுவார்கள். தொழில் மூலம் லாபமும் கீர்த்தியும் ஏற்படும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

6. கன்னி. உத்திரம் $\frac{3}{4}$, ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$

கன்னியாராசி 9 பாதங்களும் மாதம் முற்பாதியில் விசேஷ மான சௌக்கியங்களையும், தனதான்ய லாபங்களையும். நஷ்ட தனம் வரத்தையும், விவகார ஜயத்தையும், உலகில் நன்மதிப்புக் களையும், அசாத்தியமெல்லாம் சுலபமாக சாதித்தலையும்



மஹா வைபவங்களையும், நாஸ்திகர்களாய் இருப்பவர்களையும் ஆஸ்திகத்தில் ஈடுபடுபவர்களாய்ச்செய்து தெய்வத்தன்மைகளை அனுபவிக்கும்படி செய்வதாயும், சதா சந்தோஷங்களையும் தந்து பூமி உள்ள இடங்களெல்லாம் புகழ் ஓங்கச் செய்யும். மாதக் கடைசி 10 தினங்களில் சித்திரை 1, 2 பாதங்கள் அலைச்சலைத் தந்து தொழில் ஓங்கச்செய்யும். எதிர்பாராத பெரியோர்கள் அன்பு கிட்டும். புதன், வெள்ளி சுபமாகும்.

7. துலாம். சித்திரை $\frac{1}{2}$, சுவாதி - விசாகம் $\frac{3}{4}$

சித்திரை 3, 4 பாதங்கள் சுபமிராது. வீண் அலைச்சலையும் தொழில் நஷ்டத்தையும் தரும். சுவாதி நான்கு பாதங்களும் நன்மதிப்பையும், சதா பூஜ்யத்துவத்தையும், பெரிய கௌரவ பட்டங்களையும், சன்மானங்களையும் தந்து உலகப் பிரசித்தியை உண்டுபண்ணும். விவகாரம் ஜயிக்கும். சத்துருக்கள் சரண் அடைவார்கள். விசாகம் 1, 2, 3 பாதங்களும் இடம் மாறச் செய்யும். வியாபாரம் நஷ்டத்தை உண்டுபண்ணும். குடும்ப சிரமங்களும் பலவிததொல்லைகளும் ஏற்பட்டுக் கடன்விருத்தியும் ஆகும். மனம் சதா சஞ்சலமடையும். தெய்வ சிந்தனையுள்ளவர் களுக்கு சமனமாகும். புதன், வெள்ளி சுபமாகும்.

8. விருச்சிகம். விசாகம் $\frac{1}{4}$, அனுஷம் - கேட்டை.

விசாகம் நான்காம் பாதம் இடம்மாறச்செய்து தொழில் நஷ்டத்தையும், கடனையும் தரும். அனுஷம் நான்கு பாதங் களும் மிசிரமாய் நடக்கும். எவ்வளவு வசதிகள் உள்ளவர் களையும், சதா குழப்பத்தில் ஆழ்த்திவிடும். கேட்டை நான்கு பாதங்களும் அதிக உழைப்பின்பேரில் லாபங்களையும், இல்லற சுகபோகங்களையும் மனதுக்கு சந்தோஷங்களையும், நூதன உத்யோக பிராப்தியையும் தந்து சந்தோஷத்தை உண்டு பண்ணும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$

மூலம் நான்கு பாதங்களும் தொழில் நிமித்தம் இடம் மாறல் ஏற்படும். மேலோர், பெரியோர் அன்பு கிட்டும். பூராடம் நான்கு பாதங்களும் அதிக செலவுகளையும், அடிக்கடி சஞ்சாரங் களையும் தந்து சகல காரியங்களையும் சாதிக்கச் செய்யும்.

உத்திராடம் முதல் பாதம் கடன் நீங்கும். தோழில் ஓங்கும். இல்லற சுகம் நீடிக்கும். பெரியோர்கள் அன்பு கிட்டும். புதன் வேள்ளி சுபமாகும்.

## 10. மகரம். உத்திராடம் $\frac{3}{4}$, திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$

மகரராசி 9 பாதங்களும் என்றும் கண்டிராதபடி சுகபோகங்களைத் தந்து சந்தோஷம் உண்டுபண்ணும். சுபசோபனுதிகள் ஏற்படும். தோழில் ஓங்கும். வியாபாரம் விருத்தியாகும். விவகாரம் ஜெயிக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு மேல்பதவிகள் ஏற்படும். அடிக்கடி தேவகாரியங்களிலும், தர்ம காரியங்களிலும் பிரவிருத்தி ஏற்பட்டு உலகத்தில் மதிப்பு உண்டு பண்ணும். வியாழன், வேள்ளி சுபமாகும்.

## 11. கும்பம். அவிட்டம் $\frac{1}{2}$, சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$

கும்பராசி ஒன்பது பாதங்களும் சுபமிராது. வீண் அலேச்சலேயும், தோழில் நிமித்தம் சதா சஞ்சாரத்தையும் அன்னியதேச பிரயாணத்தையும், காரிய விக்னங்களேயும் தந்து மாதக்கடைசியில் சில சுபங்களேயும், சந்தோஷத்தையும் தரும்.

## 12. மீனம். பூரட்டாதி $\frac{1}{4}$, உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி ஒன்பது பாதங்களும் சுபமாகவே நடக்கும். உத்யோக லாபமும், தோழில் மூலம் விசேஷ ஏற்றமும், நூதன உத்யோக பிராப்தியும், கீர்த்தி பத்திரம் கிடைத்தலும், எங்கும் ஜயமும், விவகார வேற்றியும், குடும்ப சுபகம், நன்மதிப்பும் சதா சந்தோஷமும் ஏற்படும். வேள்ளி, சனி சுபமாகும்.

குறிப்பு: ஷெ வருஷம் உலகில் அநேகம் நூதனமான சௌகரியங்கள் தேய்வசக்தியால் பிரகாசிக்கும். சிந்துதீர காஷ்மீர் பிரதேசங்கள் பாதிக்கப்படும். தேன்னுட்டில் ஈதி பாதைகள் ஏற்பட்டு தான்ய விருத்திகளேப் பாதிக்கச் செய்யுமாதலால் சத்சனங்களும், ஆஸ்திகர்களும் சேர்ந்து மகாநதி தீரங்களிலும், சிவகேசவ ஆலயங்களிலும் பலவிதமாக வழிபாடுகளேக் குறைவுபடாது நடத்திக்கோண்டு வந்தால் சுபிக்ஷம் ஏற்பட்டு உலகில் அமைதி நிலவும், கடவுள் பிரசன்னமாய் முன்நின்று உலகை ரக்ஷிப்பார்.

உ
சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான

திருக்கடவூர்

ஸ்ரீ அபிராமிஅம்பாள் சமேத ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமிக்கும்,
ஸ்ரீ காலசம்ஹாரமூர்த்திக்கும், பரிவாரங்களுக்கும்

ஜீர்ணோத்தாரண

# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்

ஹேவிளம்பி-ஹூ சித்திரை-மீ 9உ (21—4—57) ஞாயிற்றுக் கிழமை காலை மணி 9-15-க்கு மேல் 11-30-க்குள் நடைபெறும்.

காணிக்கை செலுத்த விரும்புபவர்கள் தேவஸ்தானம் ஷராப்பில் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளலாம். ஷராப், ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானம், திருக்கடவூர் P. O., திருக்கடவூர் S. Ry. என்ற விலாசத்திற்கு M. O. மூலம் அனுப்பலாம். தேவஸ்தானம் உண்டியிலும் சேர்ப்பிக்கலாம்.

19—4—57வெள்ளிக்கிழமைமுதல் 21—4—57 ஞாயிற்றுக் கிழமை முடிய மூன்று நாட்களிலும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும், வேத, ஆகம, திருமுறைப் பாராயணங்களும் நடைபெறும். பல அறிஞர்கள் கலந்துகொள்வார்கள்.

| | |
|---|---|
| 17—4—57 | புதவாரம் யாக கால பூஜை ஆரம்பம் |
| 18—4—57 | குருவாரம் காலை மாலை யாக பூஜை |
| 19—4—57 | சுக்கிரவாரம் பரிவாரங்களின் கும்பாபிஷேகம் |
| 20—4—57 | ஸ்திரவாரம் காலை மாலை யாக பூஜை |
| 21—4—57 | பானுவாரம் மகா கும்பாபிஷேகம் |
| | இரவு பஞ்சமூர்த்திகள் புறப்பாடு |

அன்பர்கள் வருக

திருக்கடவூர்
தேவஸ்தானம் ஆபீஸ்,
9—3—'57.

மகாலிங்கத் தம்பிரான்.
கட்டளை விசாரணை.

## சென்னை, மதுரை & திருநெல்வேலி

## "ஞானசம்பந்தம்" சந்தா நேயர்களுக்கு

ஞானசம்பந்தத்திற்குப் புதிதாகச் சந்தா செலுத்திச் சேர விரும்புவோர் கீழ்க்காணும் விலாசதாரர்களுக்குச் சந்தாத் தொகையை அனுப்பி ரசீது பெற்றுக்கொள்ளலாம்.

பழைய சந்தாதாரர்கள் தங்கள் பழைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு, சந்தாவைப் புதிப்பித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

**தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலையம்**
41. உஸ்மான்ரோடு, தியாகராயநகர்,
சென்னை - 17.

❊

**உயர்திரு, இராம. கனகசபாபதிப் பிள்ளை அவர்கள்**
2/107, கம்பராமாயணத் தெரு,
வண்ணாரப்பேட்டை P. O.
திருநெல்வேலி.

❊

**உயர்திரு. ம. க. சுந்தரேச பட்டர் அவர்கள்**
38 & 48, வடக்கு ஆவணிமூலவீதி,
மதுரை.

குறிப்பு:— இசையரசு, திரு. M. M. தண்டபாணி தேசிகர் அவர்கள் பாடியதேவார இசைத்தட்டுகளின் தொகுதியும். தருமபுர ஆதீன வெளியீடு திருஞானசம்பந்தர் தேவாரம் மூன்றும் திருமுறையும், மதுரை, உயர் திரு. சிவதர்மபாஸ்கரர், ம. க. சுந்தரேசபட்டர் அவர்களிடமிருந்து விலைக்குப் பெற்றுக் கொள்ளலாம்.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram. (Mayuram). 10—4—57.

